மாலை 47 மணி 5 மே 2005 விலை ரூ.10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு

திருச்செந்திலாண்டவர் மேல்
ஆதிசங்கரர் பாடிய
ஸ்ரீசுப்பிரமணிய புஜங்கம்

திருஞானசம்பந்தர் பாடிய
திருவாலங்காட்டுப் பேய்



திருத்தல
யாத்திரையின்
சிறப்பு
- "எழுத்துச்சித்தர்"
பாலகுமாரன்

எமதர்மன் கேள்விகளும்
தருமர் உரைத்த பதில்களும்

காஞ்சி கருடசேவையில்
தொட்டயாச்சாரியார்

அடியவரை ஆட்கொண்டருளும்
ஆடவல்லீஸ்வரப் பெருமான்
- ஏ.எம்.ஆர்.



# அருள்மிகு அருணாசலேஸ்வரர் திருக்கோயில்

திருஅண்ணாமலை-606 601, தமிழ்நாடு, இந்தியா
Ph : 252438, Website : www.arunachaleswarar.com
E-mail : dc@arunachaleswarar.com

## பார்த்திப ஆண்டு 2005-2006 பௌர்ணமி கிரிவலம் வரும்நாட்கள்

| மாதம் | ஆரம்பம் | முடிவு | கிரிவலம் வரும் நாள் |
|---|---|---|---|
| ஏப்ரல் 2005 | 23-04-2005 சனி மாலை 4.36 | 24-04-2005 ஞாயிறு மாலை 4.06 | 23-04-2005 சனி |
| மே 2005 | 22-05-2005 ஞாயிறு இரவு 3.33 | 23-05-2005 திங்கள் இரவு 2.08 | 23-05-2005 திங்கள் |
| ஜுன் 2005 | 21-06-2005 செவ்வாய் பகல் 12.20 | 22-06-2005 புதன் காலை10.20 | 21-06-2005 செவ்வாய் |
| ஜுலை 2005 | 20-07-2005 புதன் இரவு 7.55 | 21-07-2005 வியாழன் மாலை 5.33 | 20-07-2005 புதன் |
| ஆகஸ்ட் 2005 | 18-08-2005 வியாழன் இரவு 3.05 | 19-08-2005 வெள்ளி இரவு 12.40 | 19-08-2005 வெள்ளி |
| செப்டம்பர் 2005 | 17-09-2005 சனி காலை 10.48 | 18-09-2005 ஞாயிறு காலை 8.47 | 17-09-2005 சனி |
| அக்டோபர் 2005 | 16-10-2005 ஞாயிறு இரவு 8.00 | 17-10-2005 திங்கள் மாலை 6.23 | 16-10-2005 ஞாயிறு |
| நவம்பர் 2005 | 15-11-2005 செவ்வாய் காலை 7.25 | 16-11-2005 புதன் காலை 6.44 | 15-11-2005 செவ்வாய் |
| டிசம்பர் 2005 | 14-12-2005 புதன் இரவு 9.42 | 15-12-2005 வியாழன் இரவு 10.01 | 14-12-2005 புதன் |
| ஜனவரி 2006 | 13-01-2006 வெள்ளி பகல் 2.32 | 14-01-2006 சனி மாலை3.52 | 13-01-2006 வெள்ளி |
| பிப்ரவரி 2006 | 12-02-2006 ஞாயிறு காலை 9.05 | 13-02-2006 திங்கள் காலை 11.05 | 12-02-2006 ஞாயிறு |
| மார்ச் 2006 | 13-03-2006 திங்கள் இரவு 3.49 | 14-03-2006 செவ்வாய் இரவு 5.50 | 14-03-2006 செவ்வாய் |
| ஏப்ரல் 2006 | 12-04-2006 புதன் இரவு 9.12 | 13-04-2006 வியாழன் இரவு 10.38 | 12.04-2006 புதன் |

01. பௌர்ணமி நாட்களில் பொது தரிசனம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

02. சிறப்புத் தரிசனக் கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ.20/- (வழி. கிழக்கு ராஜகோபுரம்)

03. விரைவு சிறப்புத் தரிசனக் கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ.50/-(வழி அம்மணி அம்மன் கோபுரம்)

04. சேவார்த்திகள் காணிக்கையாகச் செலுத்த விரும்பும் தானியங்கள் மற்றும் காய்கறிகள் மட்டும் ஸ்ரீ சம்பந்த விநாயகர் சன்னதியருகே வைக்கப்பட்டுள்ள காணிக்கை அண்டாக்களில் சேர்ப்பிக்கக் கேட்டுக்கொள்ளப்படுகிறது. இதரக் காணிக்கைகள் வழக்கம்போல் உண்டியலில் செலுத்தவும் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

05. கிழக்கு ராஜகோபுரத்தின் உட்புறம், சேவார்த்திகள் பிரார்த்தனையினை முன்னிட்டு, ஸ்ரீ கம்பத்திளையனார் சந்நிதியருகில், திருக்கோயிலின் மூலம் நெய்தீப விற்பனை நிலையம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

06. சேவார்த்திகள் நலனை முன்னிட்டு, பௌர்ணமி நாட்களில் அர்த்த மண்டப (சுவாமி) தரிசனம் நிறுத்தப்பட்டுள்ளது.

**சி.ஜெயராமன்**
துணை ஆணையர்/செயல் அலுவலர்

**ஆர்.பாஷ்யம்**
**ஏ.ஜி.இளங்கோவன்**
**எஸ்.சிவாஜி**
**திருமதி ஏ.மீரா**
அறங்காவலர்கள்

**ஏ.சி.முத்தையா**
அறங்காவலர்குழுத் தலைவர்





திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2036 பார்த்திப-சித்திரை
மாலை -47 மணி-5 மே 2005

# அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

வணக்கம்.

**"கண்ணிகர் மெய்யும், சென்னி கணமுறழ் இனத்தின் கூறும்**
**திண்டிறல் தோள்க ளேபோல் திகழ்தரும் உயிரும், வேறொன்(று)**
**எண்ணுதற் கரிய தான எஃ கமும், இயலில் காட்டும்**
**புண்ணிய முனிக்கோன் செவ்வேள் பொற்பதத்து அடிமை யாமே"**

என்பது புலவர் புராணச் செய்யுள்.

தெய்வத்தமிழும் முருகப்பெருமானும் ஒன்றே என்பதை இச்செய்யுள் இனிதே எடுத்துக் காட்டுகின்றது.

முருகப்பெருமானின் தடந்தோள்கள் பன்னிரண்டு. அதைப்போல தமிழ்மொழியின் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டு.

முருகப்பெருமானின் கண்கள் பதினெட்டு. அதைப்போல தமிழ்மொழியின் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு.

முருகப் பெருமானுக்குத் திருமுகங்கள் ஆறு, தமிழ்மொழியின் வல்லெழுத்துக்கள், இடைஎழுத்துக்கள், மெல்லெழுத்துக்கள் - இவையும் ஆறெனவே திகழ்கின்றன.

முருகப்பெருமானுக்கே உரித்தான சிறப்பாயுதம் வேலாயுதம்,அதைப் போலவே தமிழ்மொழிக்கே உரித்தான சிறப்பு எழுத்து ஆய்த எழுத்து.சிவபெருமானுக்குத் தமிழ்மொழியில்தான் பிரணவ மந்திர விளக்கத்தை மொழிந்தார்முருகப் பெருமான் என்பதை அருணகிரிநாதர்,

**" கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரிய**
**கொஞ்சித் தமிழில் பகர்வோனே!"** என்று திருப்புகழில் சிறப்புறப் பாடுகின்றார்.

இத்தகைய முத்தமிழ்க் கடவுளாம் முருகப்பெருமான் திருஅவதாரம் புரிந்த ஒப்பற்ற பெருமைக்கு உரிய திருநாள் வைகாசி விசாகத்திருநாள்.

பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலாம் திருமாலைப் போற்றித் திவ்விய பிரபந்தமாய்த் தமிழ் வேதங்கள் நான்கினைத் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என நமக்கு அருளிச் செய்த நம்மாழ்வார் திருஅவதாரம் செய்த திருநாளும் வைகாசி விசாகம் தான் எனபதால் **"உண்டோ வைகாசி விசாகத்துக்கு ஒப்பு?"** என்று கொண்டாடுகின்றார் ஸ்ரீ மணவாளமாமுனிகள்.

**"அசைவில் செழுந்தமிழ் வழக்கே**
**அயல் வழக்கின் துறைவெல்ல"**

திருஅவதாரம் புரிந்த தெய்வத்தமிழ் ஞானக்குழந்தையாம்
திருஞானசம்பந்தரின் திருநட்சத்திரம் வைகாசி மூல நட்சத்திரம் ஆகும்.

சொல்வதற்கரிய தொண்டர்தம் பெருமையைப் பாடி, அநபாயமன்னன் கவரிவீசப், பட்டத்துயானை மேல் வீற்றிருந்து தில்லைத் திருநகரின் நான்குமாட வீதிகளிலும் வலம் வந்த பெருமைக்கு உரிய **"தொண்டர் சீர்பரவுவார்"** தெய்வச் சேக்கிழாரின் திருநட்சத்திரமும் வைகாசி பூச நட்சத்திரம் ஆகும்.

இத்தகைய பெருமைகள் யாவும் பொருந்திய வைகாசி மாதத் திருக்கோயில் இதழ், வைகாசி விசாகத் திருவிழா சிறப்புடன் கொண்டாடப் பெறும் அருள்மிகு திருச்செந்திலாண்டவர் வண்ணமுகப்புடன் உங்கள் இல்லங்களை அலங்கரிக்க வருகின்றது.

நம் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்** அவர்கள் தொடங்கிவைத்துள்ள அன்னதானத் திட்டம் மக்களின் அமோக வரவேற்பைப் பெற்றுத் திருக்கோயிலுக்கு வருகை தரும் பக்தர்களின் பாராட்டைக்குவித்துத் திகழ்வதை எடுத்துக் காட்டும் வகையில் திருஆலங்காட்டுத் திருக்கோயிலுக்கு வருகை புரிந்த பக்தர்களின் கருத்துக்கள் சில இவ்விதழை அலங்கரிக்கக் கண்டு மகிழலாம்.

"கலைமாமணி " மா.இலட்சுமணன் அவர்களின் **"அன்னதானப் பலன்"** கூறும் நீதிக் கதையும் வாசகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்வது திண்ணம்.

**"அடியவரை ஆட்கொண்டருளும் ஆடவல்லீஸ்வரப் பெருமான்"** எனும் தலைப்பில் அரியகட்டுரை ஒன்றை வழங்கியுள்ளார் "ஜோதிடச் சக்கரவர்த்தி" ஏ.எம். ஆர். அவர்கள்.

**"நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்**
**தேடிச் சென்று பாடுமின் பாடிப் பணிமின்"**

என்றுஅறிவுறுத்திய திருமூலர் பெருமான் வழிநின்று திருக்கோயில் தலயாத்திரைச் சிறப்பினைச் சிறப்புற விவரிக்கின்றார் "எழுத்துச்சித்தர்" பாலகுமாரன் அவர்கள்.

"செந்தமிழ் வாரிதி " முனைவர் இரா. செல்வக் கணபதி அவர்களின் **"பாம்பாட்டிச் சித்தர் "** கட்டுரையும் மகுடி என உங்களை மயக்க வல்லதே.

விளக்கின் ஒளி இருளை விரட்டியடிப்பதைப் போல் **"மாயா தனு விளக்காம்"**உடலைக் கொண்டு பிறவித்தளையறுப்பது எப்படி என்பதை விவரிக்கின்றார் சிந்தனைச் செல்வர் சிவகுமார் அவர்கள்.

மயிலையில் அன்னதான அறம் வளர்க்க உருவாக்கப்பட்ட சித்திரச் சத்திரம் - அதன்மேல் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரனார் பாடியுள்ள அருமையான கவிதைக் காவியம் - **"காலச் சுவடுகள்"** பகுதி பெரிதும் வாசகர்களைக் கவர்வது திண்ணம்.

**"எமதர்மன் கேள்விகளும், தர்மர் உரைத்த பதில்களும்"** யாவரும் படித்து உணரவேண்டிய அரிய பயனுள்ள கட்டுரை.

இன்னும் பற்பல அரிய கட்டுரைகள், பயனுள்ள தகவல்களுடன் ஆன்மிகக் கருவூலமாய் உங்கள் அனைவரையும் இன்புறுத்த வருகின்றது இம்மாதத் "திருக்கோயில்" திங்கள் இதழ்.

"எல்லோரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே அல்லாமல்
வேறொன் றறியேன் பராபரமே"

அன்புள்ள

(த.பிச்சாண்டி, இ.ஆ.ப.)
ஆணையாளர்,

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119 உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.

# மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் அன்னதானத் திட்டத்திற்குத் தம் சம்பளம் நன்கொடை



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் திருக்கோயில்களில் அன்னதானத்திட்டத்தை 23.03.02 அன்று தொடங்கிவைத்தார்கள். அதுமுதல் தம் ஒவ்வொரு மாதச் சம்பளத்தையும் திருக்கோயில்களின் அன்னதானத் திட்டத்திற்கெனவே வழங்கி வருகிறார்கள்.

2005 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்திற்குரிய தம் சம்பளத்தைத் திருவொற்றியூர் அருள்மிகு தியாகராஜசுவாமி திருக்கோயிலின் அன்னதானத் திட்டத்திற்கு வழங்கினார்கள். திருக்கோயிலின் செயல் அலுவலர் திரு சி. இலட்சுமணன் அவர்கள், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களிடம் தலைமைச் செயலகத்தில் நேரில் வந்து காசோலையைப் பெற்றுக் கொண்டார்.

## இதழின் உள்ளே...

காணகத்திலே ஒரு சந்நியாசி நெடுநாட்கள் தவமிருந்தார். ஒரு நாள் அவர் கண் விழித்ததும் ஒரு கிராமத்துக்குள் வந்தார்....

ஏழை விவசாயி ஒருவன் - ஏர் கலப்பையைத் தோளில் சுமந்தவாறு - குடிசையை விட்டு வயலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தான்.

சந்நியாசி அவனைப் பார்த்து - "மகனே....... பசிக்கிறது ஏதாவது இருக்கிறதா?" எனக் கேட்டார்.

பதறிப் போனான் விவசாயி -



# அன்னதானப் பலன்

கலைமாமணி மா. இலட்சுமணன்

"என் மனைவியும் ஊரில் இல்லை - தங்கள் பசியைத் தீர்க்க - நான் தான் சமையல் வேலையில் ஈடுபட வேண்டும். பசியைத் தாங்கிக் கொண்டு - சற்று நேரம் பொறுமையாக இருக்க வேண்டும்"..... என்றான் விவசாயி. "பசி அதிகமாக இருக்கிறது.... நீராகாரம் இருந்தால் கூட பரவாயில்லை" என்றார் சந்நியாசி.

"நேற்று சமைத்த கீரை கொஞ்சம் சட்டியில் இருக்கிறது. சுட வைத்துக் கொண்டு வருகிறேன்" என்று கூறி விட்டு குடிசைக்குள் சென்று - கீரையைப் பதப்படுத்தி எடுத்துக் கொண்டு வெளியே வந்தான் விவசாயி.

திண்ணையில் உட்கார்ந்திருக்கும் சந்நியாசியோ கண்களை மூடிக்கொண்டு தவநிலையிலிருந்தார்.

சாமி... சாமி எனக் கூப்பிட்டுப் பார்த்தான் - ஊஹூம். அசைவே இல்லை.... கீரைச் சட்டியை அவர் அருகே வைத்துவிட்டு.... கலப்பையுடன் வயலுக்குப் போய் விட்டான்.

மாலையில் வந்து பார்த்தான். சந்நியாசி தனது கண்களைத் திறக்கவே இல்லை.... நாட்கள் மாதங்களாகி ஆண்டுகளாகி விட்டன... திண்ணையில் கீற்று வைத்து மூடி மறைத்து விட்டான் விவசாயி.... காலங்கள் உருண்டு ஓடின, இயற்கையின் மாற்றத்தால் எல்லாமே மாறிவிட்டன.. குறிப்பாகச் சொன்னால் அந்த கிராமம் உருமாறிவிட்டது...

பல ஆண்டுகளுக்குப் பின்னே... தனது நிலத்திலே கிணறு தோண்டும் பணியில் ஈடுபட்டான் குடியானவன் ஒருவன். மண்ணைத் தோண்டும் போது சடாமுடி தெரிந்தது - பிறகு சந்நியாசியின் முகம் தெரிய ஆரம்பித்தது - அரசனுக்குத் தகவல் பறந்தது.

இராஜகுருவுடன் அரசன் அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தான்.

சந்நியாசியின் மோன நிலையைத் தவிர்க்க - ஒரு குடத்திலே பாலைக் கொண்டுவரச் சொன்னார் இராஜகுரு.

மண்ணுக்குள்ளிருக்கும் சந்நியாசியின் தலையில் பாலை ஊற்றும்படி மன்னனுக்குக் கட்டளையிட்டார். அவ்வாறே செய்தான் அரசன்.

கண்விழித்த சந்நியாசி - "கீரை எங்கே" என்று கேட்டார். அரசனுக்கும் ஒன்றும் விளங்கவில்லை. "என்ன கீரை வேண்டும்? எவ்வளவு கீரை வேண்டும்? எந்தப் பக்குவத்தில் வேண்டும்?" எனக் கேட்டான்,

சந்நியாசி சிரித்தார் - தவநிலையில் பல ஆண்டுகள் ஓடிப் போனதை உணர்ந்தார்... இவரைப் பொறுத்தவரை அவைகள் விநாடிகள்தான்.

அரசரைப் பார்த்து சந்நியாசி கூறினார் - "கீரை கொண்டு வருகிறேன் என்று கூறிவிட்டுச் சென்றதற்கே மன்னனாகி விட்டாய். கீரை கொண்டு வந்திருந்தால் சக்ரவர்த்தியாகி இருப்பாய்" எனப் பூர்வீகத்தில் நடந்தவற்றை விளக்கினார் சந்நியாசி.




# அன்னதானக் காரணியாம் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களை ஆலங்காட்டடிகள் ஆசீர்வதிக்கட்டும்!

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!"
"தானத்தில் சிறந்தது அன்னதானம்!"
என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க,
"அமுத சுரபியாக"
"அன்னபூரணியாக"
விளங்கும்
"தங்கத் தாரகை"
மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் பொன் மனதில் உதித்து, நாளும் அன்னமிடும் தம் பொற்கரங்களால் தவக்கி வைத்த, "திருக்கோயில் நித்திய அன்னதானத் திட்டம்" ஆன்மிக உலகில் அனுதினமும் நிகழும் ஓர் அற்புதம்!
வள்ளல் உள்ளம் படைத்தோர்
அனைவரும் பாராட்டிப் பங்கு கொள்ளும் -
நாளும் வளர்ந்து வரும் -
வரலாற்றில் என்றும் நிலைத்து நிற்கும் -
வானவரும் வாழ்த்துகின்ற -
அன்னம் பாலிப்புத் திட்டம்!

இந்தத் தெய்வீக மணம் கமழும் அன்னதானத் திட்டம் நடைபெறும் திருத்தணி அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலின் உபகோயிலாகிய திருவாலங்காடு அருள்மிகு வடாரண்யேஸ்வரசுவாமி திருக்கோயிலுக்கு வருகை தந்து, ஆலங்காட்டடிகளைத் தரிசித்து, அன்னதானத்திலும் பங்கு பெற்றவுடன் நெஞ்சில் பீறிட்டெழுந்த எண்ணப்பிரவாகங்களை பக்தர்கள் கருத்துப் பதிவேட்டில் மனம் நெகிழ்ந்து பதிவு செய்ததை - நெஞ்சில் என்றும் தெய்வீகத்தைச் சுமந்து "திருக்கோயில்" இதழோடு ஒன்றிவிட்ட வாசகப் பெருமக்கள் பார்வைக்கு மகிழ்வுடன் அர்ப்பணிக்கப்படுகிறது.

**இரா. முத்துசாமி**, பி.எஸ்.சி.பி.எல்.,
இணை ஆணையர் / செயல் அலுவலர்

★ 8-3-05 செவ்வாய் மகா சிவராத்திரி அன்று வேலூரில் இருந்து இந்தக் கோவிலுக்கு வந்திருந்தோம். சாப்பாடு சாப்பிட்டது மட்டுமல்லாமல் மற்றவர்கள் (உடன் இருப்பவர்கள்) நன்கு கவனித்தது மனதுக்கு திருப்தியாக இருந்தது
- என். கலையரசி, வேலூர்

★ *நான் பாலகுமாரன், சென்னையில் வசிக்கும் எழுத்தாளர். என் உற்றார் உறவினரோடு ஆலங்காட்டு ஆடலைக் காண வந்தேன். நிறைவான தரிசனம். அழகாய் வரலாறு, புராணக் கதை சொல்லி அபிஷேகம், அர்ச்சனை செய்வித்தனர். வற்புறுத்தி விருந்தோம்பல் செய்தனர். மிகச் சுவையான உணவு, பதமான உபசரிப்பு, மரியாதையான அணுகுமுறை, கோயில் மிகச் சுத்தமாய் பராமரிக்கப்படுவது பார்க்க ஆனந்தமாய் இருந்தது. ஆலங்காட்டு அடிகள் அன்னதானக் காரணியான முதல்வர் செல்வி ஜெயலலிதா அவர்களை ஆசீர்வதிக்கட்டும். பாலகுமாரன்.*

ஆலங்காட்டில் அபாரமான அன்னம்
மு.நா. பாலசுப்பிரமணியன், அரக்கோணம்
நல்ல விதமான அருமையான ஆகாரம். நன்றி
டி. கன்னியா, மகாராஜபுரம்

காலச்சுவடுகள்

## மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாராட்டிய திருமயிலை சித்திரச்சத்திரம்

[அன்னதான சத்திரத்தின் மேல் பாடப்பட்ட ஒரு எழில் காவியம்]

மலிவிழா வீதி என ஞானசம்பந்தர் பாடிய மயிலையில் தெற்கு மாடவீதியில் அமைந்துள்ளது வியாசர்பாடி விநாயக முதலியார் சத்திரம்.

அது 19 ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்றது. அழகிய பல சித்திரங்கள் அமைந்துள்ள இச்சத்திரம் சித்திரச் சத்திரம்" என அழைக்கப் படுகின்றது.

பெருங்கவிஞர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் "சித்திரச் சத்திரம் புகழ்ச்சிமாலை" என 100 பாடல்கள் கொண்ட ஒரு நூலினை இயற்றி இச்சத்திரத்தைப் பாடியுள்ளது நாம் அறிந்து கொண்டாட வேண்டிய ஒன்றாகும்.

"மயிலை அருள்மிகு கபாலீசுவரர் புகழ் பரவும் விநாயக முதலியாரின ஒரு வடிவம் கொண்டது போன்றது இச்சித்திரச்சத்திரம்" என்று ஒரு பாடலில் போற்றுகின்றார் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

விநாயக முதலியாரின் சித்திரச் சத்திரத்தில் அடியார்களுக்கு நாளும் அன்னதானம் நடைபெற்றுள்ளது.

அவ்வன்னதானத்தை பற்பலவாறு போற்றிப் புகழ்ந்துள்ளார் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. அவர்தம் புகழாரங்களில் சில பின் வருமாறு:

"சித்திரச் சத்திரத்தில் உள்ள அட்டில் (சமையலறை) வந்து அடைந்தவர்களின் வாய்க்கு விருந்தூட்டும். சித்திரங்கள் கண்களுக்கு விருந்தூட்டும்" (பாடல்14)

"திருமயிலையில் விநாயக முதலியார் அமைத்த சத்திரம் அக்காலம் இருந்திருக்குமாயின் சிவபெருமான் பசித்து வந்த சுந்தரமூர்த்திகள் பொருட்டுத் திருக்கச்சூர் திருத்தலத்தில் வீடு வீடாகச் சென்று பிச்சை எடுத்திருக்க மாட்டார்." (பாடல் 43)

"திருமயிலைச் சத்திரமும் கிணறும் அன்று இருந்திருந்தால் மீனாட்சியம்மை திருமணத்தின் போது குண்டோதரனின் பசியும் தாகமும் தீர்க்கும் பொருட்டு அன்னக் குழியையும் வைகை நதியையும் சோமசுந்தப் பெருமான் மதுரையில் வரவழைத்தளிக்க முற்பட்டிருக்க மாட்டார்". (பாடல் 48)

"திருமயிலைச் சத்திரத்துள் மிக்க பசி கொண்டு நுழையும் குழி விழுந்து ஒடுங்கிய வயிற்றை உடையவர்கள். உண்டு திரும்பும் போது கும்போதரன் போன்று (யானை போன்று) மிகப் பெரிய வயிறு உடையவர்களாகப் பசியாறி மகிழ்ச்சியுடன் திரும்புவார்கள்". (பாடல் 16)



"மரங்கள் எல்லாம் கற்பகமரம் ஆகமாட்டா. உலகில் உள்ள புரங்கள் சிவபுரம் ஆகமாட்டா. எழுத்துக்கள் எல்லாம் அகரம் ஆகமாட்டா. அதுபோல மற்ற சத்திரங்கள் எல்லாம் சித்திரச் சத்திரத்திற்கு ஒரு போதும் ஈடாக மாட்டா". (பாடல் 91)

**அன்னச் சத்திரத்தைப் புகழும் சித்திர சத்திரப் புகழ்ச்சி மாலை போல் வேறு நூல் உலகில் ஒன்றும், இருப்பதாகத் தெரியவில்லை.**



அத்வைத மதத்தை நிலைநிறுத்திய ஆதிசங்கரர் மீது அசுயை கொண்ட அபிநவகுப்தன் என்பவன் அதர்வண மந்திரப் பிரயோகம் செய்த காரணத்தால் ஆதிசங்கரரைக் காசநோய் பற்றிக் கொண்டது.

"திருச்செந்தில் சென்று தேவாதி தேவனாகிய சுப்பிரமணியப் பெருமானை வழிபட்டால் நோய்நீங்கும்" என்று அசரீரி உணர்த்தியது.

திருச்செந்தூர் முருகப்பெருமானை ஆதிசங்கரர் வழிபட வந்தபோது, ஆதிசேடனும் செந்தில் ஆண்டவனை வழிபட்டுத் தன் புஜத்தால் வளைந்து, நெளிந்து திரும்பி வந்து கொண்டு இருந்தார்.

ஆதிசேடன் வளைந்து நெளிந்து வந்த பான்மையில் ஸ்ரீசுப்பிரமணியப் பெருமான் மீது "புஜங்கம்" என்ற புதுவகைப் பாமாலையை வடமொழியில் புனைந்து அருளினார் ஆதிசங்கரர்.

ஸ்ரீசுப்பிரமணிய புஜங்கம் பாடியவுடன் செந்திற் கந்தன் திருவருளால் காசநோய் நீங்கிப் போயிற்று.

சுப்பிரமணிய புஜங்கம் 33 பாடல்களைக் கொண்ட அற்புதப் பாமாலையாகும்.

இதனைப் பாடி வேண்டும் பக்தர்கள் சகல செல்வங்களும் கை மேற்பெற்று இன்புறுவர் என்பது திண்ணம்.



சமரில் சக்தி வேல் கரத்தில்
தாங்கி மயில் மீ தூர்வோனே!
குமரி! வள்ளி காதலளம்
குறைகள் தீர்க்கும் வேலவனே!
அமரில் தாரகன் தனை அழித்தாய்!
அடியேன் என்னைக் காத்திடுக!"

"கருணை மிகுமோர் பெருங்கடலே!
கந்தா நின்னைத் தொழுகின்றேன்
அருமை மிகுநின் பொன்னொளிசேர்
அடியில் நானும் விழுகின்றேன்.

எருமைக் காலன் வரும் போதென்
எந்தப் புலனும் பேசாது!
அருகே வந்து காத்திட நீ
அசட்டை செய்யல் ஆகாதே!"

"அண்டம் அனைத்தும் வென்றங்கே
ஆண்ட சூர பதுமனையும்
மண்ணுள் மண்ணாய்த் தாரகனை
மாயன் சிங்க முகத்தோனைத்

தண்டித் தவனும் நீயன்றோ?
தமியேன் மனத்தில் புகுந்திங்கே
ஒண்டிக் கிடக்கும் கவலையெனும்
ஒருவனைக் கொல்லல் ஆகாதோ?"

"கொடிய பிணிகள் அபஸ்மாரம்
குஷ்டம் கூயமும் மூலமொரு
விடியா மோகம் சுரம்பைத்யம்
வியாதி கன்ம மெனும் நோய்கள்
கொடிய பிசாசு போன்றவைகள்

# ஆதிசங்கரர் திருச்செந்திலாண்டவரைப் போற்றிப் பாடிய ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம்

வடமொழியில் ஆதிசங்கரரால் பாடப் பட்ட ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கத்தைத் தமிழ்மொழியிலும் மொழிபெயர்த்துள்ளனர் கற்றறிந்த சான்றோர்கள்.

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கத்திலிருந்து ஒருசில பாடல்கள் மட்டும் இங்குப் பயின்று நலம்பெறுவோமாக!

"வருக குமரா அருகெனவே
மகிழ்ந்தே இறைவன் கரமேந்தப்
பெருகும் சக்தி மடியிருந்தே
பெம்மான் சிவனின் கரம்தாவும்
முருகே! பரமன் மகிழ்ந்தணைக்கும்
முத்தே! இளமை வடிவுடைய
ஒருசே வகனே! கந்தாநின்
உபய மலர்த்தாள் தொழுகின்றேன்."

"குமரா! பரமன் மகிழ்பாலா!
குகனே! கந்தா! சேனாபதே!

குமரா உன்றன் திருநீறு
மடித்த இலையைப் பார்த்தவுடன்
மாயம் போலப் பறந்திடுமே!"

"மக்கள் மனைவி சுற்றம் பசு
மற்ற உறவினர் அனைவோரும்
இக்கணத் தென்னுடன் வசித்திடுவோர்
யாவரும் ஒன்றே லட்சியமாய்ச்
சிக்கெனப் பற்றிநின் திருவடியைச்
சேவிக்கும் தன்மை தருவாய் நீ!
குக்குடக் கொடியோய்! செந்தில் வாழ்
குமரா! எமக்குக் கதிநீயே!"

(ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கத்தை வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்த அ.வெ.ரெ. கிருஷ்ணசாமி ரெட்டியார் மொழிபெயர்ப்பில் உள்ளவை இப்பாடல்கள்)

# திருத்தல யாத்திரையின் சிறப்பு



"எழுத்துச் சித்தர்"
**பாலகுமாரன்**

தென்னிந்தியாவில் கோடைவிடுமுறை என்பது தாங்கமுடியாத வெயிலிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக ஏற்பட்டது. பள்ளிக்கூடம் போகின்ற ஒரு வேதனை கூட அப்போது குழந்தைகளுக்கு வேண்டாமென்று, மின் விசிறியில்லாத பள்ளிக்கூடங்களில் வியர்த்து விறுவிறுத்துக் களைத்துக் கிடப்பார்கள் என்று வெய்யில் உச்சியில் இருக்கின்ற இந்த இரண்டு மாதமும் விடுமுறை என்று சொல்வார்கள்.

ஆனால், இந்த விடுமுறையில் தான் அதிகமாக ஜனங்கள் ஊர் சுற்றுகிறார்கள். விதம்விதமான இடங்களுக்குப் பயணப்படுகிறார்கள். இப்படி வெய்யிலில் சுற்றுலாப் போகும் இடம் எது என்றால், கொடைக்கானலும், ஊட்டியும் தான் உல்லாசப்பயணிகளின் பட்டியலில் முதல் இடம் பெறுகின்றன, ஏற்காடும், தேக்கடியும் அடுத்த இடத்தைப் பெறுகின்றன.

சிறிய கிராமங்களில் சின்ன நகரங்களில் இருப்பவர்கள் பொழுது போவதற்கு மிகச்சிறந்த இடம் கடற்கரைப்பட்டினங்கள்தான் என்று சொல்லி அங்கே நகரத் தலைப்படுகிறார்கள். இந்தக் கடற்கரைப்பட்டினங்கள் உல்லாசப் பயணிகளைக் கவர்வதற்கென்றே தீம் பார்க்குகள் வைத்திருக்கின்றன.

நீர் சறுக்கு விளையாட்டுக்களும், சுழல் ராட்டினமும், சுழலும் பெட்டிகள் கொண்ட விளையாட்டு விஷயங்களும் சிறியவர்களையும், பெரியவர்களையும் அதிகம் கவர்கின்றன. இருநூறு ரூபாய் கொடுத்து உள்ளே போய்விட்டால் நடுநிசிவரை விதம்விதமாக பேயாட்டம் ஆடிக்கொண்டிருக்கலாம்.

தீம் பார்க் என்று சொல்லப்படுகின்ற இவ்விதமான களியாட்டக்கூடங்கள் அற்புதமானவைதான். ஆனால், ஐந்திலிருந்து பதினைந்து வயது உள்ளவர்களுக்கே இவை உற்சாகமளிக்கும். அதற்கு மேலுள்ளவர்கள் அதாவது அறிவுதாகம் மிக்கவர்கள் இதில் ஈடுபட்டால் அயர்ச்சிதான் ஏற்படும்.

அப்படியானால் பதினாறு வயதில் கோடைவிடுமுறையைக் கழிக்க எது நல்ல இடம் கொடைக்கானலா?, ஊட்டியா? என்று கேட்கிறீர்களா? இல்லை, இவையும் சிறப்பான இடம் என்று சொல்லுவதற்கில்லை. வெய்யில் கொளுத்துகின்ற விருதுநகர் மாவட்டமும், வயலெல்லாம் கரம்பாய் மாறியிருக்கின்ற தஞ்சை மாவட்டமும், வியர்த்து ஊற்றுகின்ற சென்னையும், செங்கற்பட்டும் போன்ற இடங்களிலிருந்து கொடைக்கானலுக்கோ, ஊட்டிக்கோ போனால் அந்தப் பருவநிலை மாற்றம் உடனே உடம்பைத் தாக்கும். இரவுநேரம் மிகச்சரியான ஹோட்டலும், நல்ல கம்பளி உடையும் இல்லையெனில் அதீத சில்லிப்பு இந்த வெய்யில் தேசத்திலிருந்து வந்தவர்களுக்கு நெஞ்சில் சளி கோர்த்து மூச்சுத்திணற வைத்து சிலசமயம் இருதய பாதிப்பும் ஏற்படும். கோடைக்காலத்தில் நூறுரூபாய் வசூலிக்கின்ற இடங்களிலெல்லாம் அங்கே ஐநூறு ரூபாய் வசூலிக்கின்ற இடமாக மாறிப்போவது காசுக்குப் பிடித்த கேடு.



என்னதான் சொல்லுகிறீர்?. கோடைக்காலத்தில் எங்கேதான் போவது?எந்த இடத்தில் அதிகமாகக் கோவில்கள் இருக்கின்றனவோ அங்கே கோடைக்காலத்தில் உல்லாசப்பயணம் போகலாம். குறிப்பாய் சென்னையில் உள்ளவர்கள் திருச்சிக்குப் போகலாம். திருச்சியில் உள்ளவர்கள் காஞ்சிபுரம் வரலாம். திருவண்ணாமலைக்காரர்கள் கன்னியாகுமரியை நோக்கிப் போகலாம். திருநெல்வேலிக்குச் செல்லலாம்.

தென்னிந்தியா முழுவதும்

கோவில்கள் நிரம்பி இருப்பதால் இந்தக்கோவில்களுக்குப் போவது மிகச்சிறந்த மனவிடுதலையையும், அதீத உற்சாகத்தையும் தரும். எப்படி என்று கேட்கிறீர்களா?.

கோவில்களில் ஒரு அமைதியைக் கடைபிடிக்க வேண்டும் ஒரு அவசியம் ஏற்படும். அந்த அமைதி உள்ளுக்குள் பார்ப்பதற்கு உதவி செய்யும்.

உதாரணமாய் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை, திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி கோவில் போன்றவை சரித்திரப் பின்னணி கொண்டவை. அந்தக் கோவில்களைப் பற்றி படித்துத் தெரிந்துகொண்டுவிட்டால், விசாரித்து அறிந்துகொண்டுவிட்டால் நேரடியாகப் பார்க்கும் போது மிகப்பெரிய பிரமிப்பை இந்தக் கோவில்கள் ஏற்படுத்தும்.

ஸ்ரீரங்கம் கோவில் காலம் தாண்டியது. பலநூறு அரசர்கள் வாழ்ந்த இடம். நூற்றுக்கணக்கான கதைகள் மலிந்த ஒருகோவில். சேர சோழ பாண்டிய மன்னர்களால் மட்டுமின்றி விஜயநகர சாம்ராஜ்ஜியத்து மன்னர்களும் நாயக்க மன்னர்களும் அரசாண்ட பூமி, இஸ்லாமியர்கள் படையெடுப்பால் சின்னாபின்னமாக்கப்பட்ட இடம்.

ஸ்ரீரங்கத்துச் சரித்திரம் என்று தனியாக ஒரு புத்தகம் போட்டால் பல பக்கங்களுக்குப் போகும். அகிலாண்டேஸ்வரி கோவில் சாக்த பூமி, சக்தி வழிபாடு நடத்திய இடம். அம்பாள் உக்ரரூபமாக உலாவந்த கோவில். உறங்கிக் கிடந்த காளமேகப் புலவனுக்கு வாயில் தாம்பூலம் ஊற்றி அவனை கவியாக்கிய தேவி. அங்குள்ள கல்லும், கல்வெட்டுகளும் பலநூறு கதைகள் சொல்லும்.

திருச்சி மலைக்கோட்டை பல்லவர் காலத்திலிருந்து பிரிட்டிஷ் காலம் வரை பலநூறு கைகள் மாறி மகான்களும், சாதுக்களும் வலம்வந்த இடம். வாழ்க்கையில் எதிர்காலம் பற்றிய நம்பிக்கையை இந்தக்கோவில்கள் தோற்றுவிக்கின்றன. அதுமட்டுமல்ல கடந்தகாலம் பற்றிக் கதைகதையாய்ச் சொல்கின்றன.

திருவானைக்காவல் மண்டபம் மண்டபமாக இருப்பதைச் சற்று நிதானமாக நடந்துவந்தால்



மிகப்பெரிய வியப்பு தோன்றும் எந்தவித உபகரணமும் இல்லாமல் இவ்வளவு நீளமாக, இத்தனை அகலமாக ஏன் மண்டபங்கள் கட்டினார்கள்? எப்படிக் கட்டினார்கள்? எத்தனை பேர் சேர்ந்து கட்டினார்கள்? என்று யோசிக்க ஆரம்பித்தாலே அந்த இடம்விட்டு நகரமுடியாது, கொஞ்சம் சரித்திரம் சம்மந்தமான-மதம் சம்மந்தமான புத்தகங்களைப் படிக்க வேண்டும். யார் இவற்றைப் நன்கு படிக்கிறார்களோ அவர்களுக்கு உல்லாசப் பயணம் மிகச்சிறப்பாக அமையும்.

மதுரையின் மீனாட்சி அம்மன் கோவிலைவிட, திருமலை நாயக்கர் மகாலை விட, கதை சொல்லுகின்ற ஒரு ஸ்தலம் உண்டோ?.

சங்கப் புலவர்கள் வீற்றிருந்த இடம், பொற்றாமரைக் குளத்திலிருந்து நல்ல நூல்கள் மிதந்து வந்த இடம். தமிழ் நடந்த பாதை. எல்லாம் கண்ணுக்குத் தெரியும். அது வெறும் கோவிலல்ல, தமிழர் நாகரீகம் அது வெறும் கட்டிடமல்ல. நம் முன்னோர் கொஞ்சிக் குலவித் திரிந்த இடம்.

நானூறு ஆண்டுகளுக்கு முன்பு குடிசையாக இருந்த ராமேஸ்வரம் எவ்வளவு பெரிய கோவிலாக

**எந்தத் திருக்கோயிலில் எந்தக் காலப் பூஜை விசேஷம்?**

மதுரை அருள்மிகு சொக்கநாதர் ஆலயத்தில் காலசந்திப் பூஜை விசேஷம்.

திருவானைக்காவல் அருள்மிகு ஜம்புகேஸ்வரர் ஆலயத்தில் உச்சிக்கால பூஜை விசேஷம்.



திருவாரூர் அருள்மிகு தியாகராஜர் ஆலயத்தில் சாயரட்சை பூஜை விசேஷம்.

தில்லை அருள்மிகு நடராஜர் ஆலயத்தில் அர்த்தஜாமப் பூஜை விசேஷம்.

மேற்காணும் ஆலயங்களுக்கு உரிய விசேஷ பூஜையில் வழிபட்டால் ஆயிரம் பிரதோசம் கண்ட அரும்பலன்கள் உண்டாகும் என்பது நம்பிக்கை.

மாறியிருக்கிறது? யார் அதைக் கட்டியது என்று விசாரித்துப் பார்த்தால் மிகப்பெரிய சரித்திரப்பயணம் தொடரும்.

அது, பித்ருக்கள் என்று சொல்லப்படும் நமது மூதாதையர்களுக்கு நீர்வார்க்கின்ற இடம். எப்போது ஒருவன் அந்த இடத்திற்குப் போகிறானோ அவனுடைய பித்ருக்கள் அங்கே கரையில் ஆவலாக அவன் வந்து நீர்வார்க்க வேண்டும் என்று காத்துக்கிடக்கிறார்கள் என்ற நம்பிக்கை உண்டு. ஒருமுறை அலைசுருளும் அந்தக் கடலோரம் நின்று மணலில் சிவலிங்கம் பிடித்துப் பாட்டனை, பாட்டனுக்குப் பாட்டனை, அதற்கு முன்பு இருந்தவனை நினைத்து நீங்கள், ஒருவேளை மறுஜென்மம் எடுக்காதிருப்பின், கடவுள் அருகே போகாதிருப்பின், ஆவிரூபமாய் அலைந்து கொண்டிருப்பின் இதோ உங்கள் மனக்கேதம் தீர இந்த நீர் உதவட்டும் என்று சொல்லி நீர் விட்ட கணத்திலேயே, அவர்கள் மனக்கேதம் தீர்ந்து வேறுவிதமாய் மாறுவார்கள். மாறும் முன்னே "என்மனக்கேதம் தீர்த்தவனே! என் பேரனே! நீ நலமாய் இரு" என்று இருகை தூக்கி வாழ்த்துவார்கள். காசியும், ராமேஸ்வரமும் சென்று வந்த அத்தனை பேர் வாழ்விலும் நல்ல மாற்றங்கள் நிச்சயம் ஏற்படுகின்றன.

யாரோ மன்னர்களை நினைத்துக் கொள்வதைவிட நம்முடைய மூதாதையர்களை நினைத்துக் கொள்ள ராமேஸ்வரத்தை விட மிக நல்ல இடம் உண்டோ? நல்ல சிற்பங்களை, ஓவியங்களைக் காணவேண்டுமென்றால் கோயம்புத்தூருக்கு அருகே உள்ள பேரூர், திருச்சிக்கு அருகேயுள்ள ஸ்ரீ ரங்கம், தஞ்சையின் மையத்திலுள்ள பெரிய கோயில், திருநெல்வேலிக்கு அருகேயுள்ள சங்கரன் கோயில், திருநெல்வேலி காந்திமதி கோவில் என்று பல இடங்கள் சொல்லலாம்.

இன்னும் சற்றுத் தொலைதூரமாக உள்ளடங்கிய கோயிலாகப் போக வேண்டுமெனில் மாணிக்க வாசகர் சிறப்படைந்த ஆவுடையார் கோயிலுக்குப் போய் பார்க்கலாம். எவ்வளவு அற்புதமான சிற்பங்கள்! சிவனின் பெருமையை மிகத்தெளிவாகச் சொல்லுகின்ற கோவில் அது. திருநெல்வேலிக்கருகே நவதிருப்பதிகள் என்று விஷ்ணுவின் பெயரைச் சொல்லுகின்ற கோவில்களும் இருக்கின்றன.

விடியல் நேரம் எழுந்து வெய்யில் உச்சிக்கு வருவதற்கு முன்பு இரண்டு மூன்று கோவில்கள் போய்விட்டு மறுபடியும் வந்து தங்குமிடத்தில் அடங்கி அமர்ந்து நன்கு உண்டு அயர்ந்து தூங்கிப் பிறகு வெய்யில் தாழ மீண்டும் எழுந்து இரவு ஒன்பது மணிவரை இரண்டு மூன்று கோவில்களுக்குப் போய் வரலாம். ஏதோ ஒரு கோவிலில் மனம் ஒருமித்து விடும். நம் உள்ளே பார்ப்பதற்குத் தெரிந்து போகும். ஒரு அமைதி படர்ந்து விடும். அடுத்தவரோடு பேசத்தோன்றாது. கருவறைக்குப்போய் கைகூப்பி திரும்புகிறபோது மனம் தன்னைக் கவனிக்கத் துவங்கும்.

எந்தக் கோவில் உங்களுக்குள்-உள்ளுக்குள் ஒரு பரவசத்தை ஒரு அமைதியை ஏற்படுத்தியதோ அங்கு உள்ள தெய்வத்திடம் நீங்கள் மனம் விட்டுப் பேசலாம்.

**இறைவழிபாட்டால் உண்டாகும் பலன் :**



திருத்தலங்களுக்குச் சென்று தெய்வ வழிபாடுசெய்வதால் முன்னைப் பழவினைகள் தீர்ந்து, வாழ்க்கையில் புத்துணர்வும், புத்தொளியும், புதுமகிழ்வும் மனஅமைதியும் உண்டாகும்.

"ப்ளஸ் டூ பரிட்சை எழுதிவிட்டேன். நல்ல மார்க்குகள் கிடைத்து எனக்கு உன்னதமான ஒரு படிப்பும் கிடைத்தால் நான் மறுபடியும் வந்து பார்க்கிறேன்" என்று வேறு எவருக்கும் சொல்லாமல் அந்தத் தெய்வத்திடம் நீங்கள் மட்டுமே பேசலாம்.

"நான் படிப்பை முடித்துவிட்டேன், எனக்கு திருமணம் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நல்ல திருமணத்திற்குத் தாயே, நீ ஏற்பாடு செய்யக்கூடாதா?" என்று அம்மனை வேண்டிக்கொள்ளலாம். வேண்டுதல்கள் நிறைவேறி விட்டால் மறுபடியும் விரைவாகப்போய் அந்தக் கோவிலில் மனம் கசிந்து நிற்கலாம்.

"மேற்கொண்டு படிக்க இடம் கிடைத்துவிட்டது. தாயே நீ கூட இரு" என்று சொல்லலாம்.

"நல்ல புருஷன் கிடைத்துவிட்டான். சிவனே என்னை ஆசிர்வதியும், நல்ல குழந்தைகளுக்கு வரம் கொடும்" என்று கைகூப்பலாம்.

பதினாறு வயதிற்குப்பிறகு படிப்பு பற்றியும், வேலைபற்றியும் வாழ்க்கையில் முழுமையாகி திருமணம் செய்து கொள்வதுபற்றியும் யோசிக்காது வெறுமே தீம் பார்க்கில் இளித்துக் கொண்டிருந்தால் ஜாலி.... ஜாலி என்று குதித்துக் கொண்டிருந்தால் வழுக்கி மோதிக் கொள்ள நேரிடும். உங்களுடைய வாழ்க்கையில் நிதானம் வர கோவிலுக்கான உல்லாசப்பயணங்கள் மிக நிச்சயம் உதவும்.

ஐந்திலிருந்து பதினைந்து வரை எப்படி வேண்டுமானாலும் வாழுங்கள். அதற்குப்பிறகுதான் இருக்கிறது உண்மையான சோதனை. நிஜமான பிரச்சினை. அந்தப் பிரச்சினைகளுக்கும் சோதனைகளுக்கும் உங்களை உடனிருந்து காக்க இம்மாதிரி தெய்வத் திருத்தலங்கள்தான் உதவி செய்யும்.

நான் சொன்னதை ஆழ்ந்து யோசியுங்கள் - உங்கள் நண்பர்களாடு பேசுங்கள்.

"பாலகுமாரன் கிழவன்டா? இவன் பேச்சை கேட்காதே" என்று உங்கள் காதோரம் கூக்குரலிட்டால் உங்கள் காதோடு நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். பதினாறு வயதில் திருத்தல யாத்திரைக்குப் போகப் பழகிக்கொண்டேன். இன்று பார் புகழும் எழுத்தாளனாகவும், நிறைவுள்ள ஒரு மனிதனாகவும் வாழ்வதற்கு அந்த திருத்தல யாத்திரைகளே காரணம். காதுள்ளோர் கேட்கக்கடவர்.

★★★

# தாயும் தந்தையும் சாப்பிட்டார்களா?

(நீதிக் கதை)



பிரம்மதேவர் ஒருமுறை தம்மைக் காணவந்த வசிட்டர், விசுவாமித்திரர் இருவரிடமும் ஒரு வேண்டுகோளை வைத்தார். "நாளைக்கே இருவரும் ஆயிரம் பேருக்குச் சாப்பாடு போடவேண்டும். உங்களைவிட மட்டமானவர்களுக்கே நீங்கள் சாப்பாடு போடவேண்டும்" என்றார் பிரம்மதேவர்.

" பூ! இதென்ன பிரமாதம்" என்று சொல்லி அடுத்த நாளே ஆயிரம் பேருக்குச் சாப்பாடு போட்டார் விசுவாமித்திரர்.

"உங்களைவிட மட்டமானவர்களுக்கே சாப்பாடு போடவேண்டும் என்று நிபந்தனை விதித்தேனே" என்றார் பிரம்மா.



" என்னைவிட எல்லோரும் மட்டமானவர்கள் தான்" என்று பதில் உரைத்தார் விசுவாமித்திரர்.

பல நாட்கள் ஆகியும் வசிட்டர் யாருக்கும் சாப்பாடு போடவில்லை. விசாரித்ததில் "என்னை விட மட்டமானவர்களை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை" என்று தெரிவித்தார் வசிட்டர்.

"நான் கண்டுபிடித்துத்தருகிறேன்" என்பின்னால் வாரும்"என விசுவாமித்திரர் வசிட்டரை அழைத்துக் கொண்டு ஒரு குடியானவன் வயலுக்குப் போனார்.

அந்தக் குடியானவன் பல்கூட தேய்க்காமல், சுருட்டு பிடித்தவாறு வயலை உழுதுகொண்டிருந்தான் .

"இவன் மட்டமானவன் தானே" என்றார் விசுவாமித்திரர்.

"பொறுத்திருந்து பாரும்" என்றார் வசிட்டர்.

குடியானவனுடைய மனைவி அவனுக்குச் சாப்பாடு கொண்டு வந்தாள்.

பல்கூட தேய்க்காமல் சாப்பிட அமர்ந்த அவன் "என் தாயாரும் தகப்பனாரும் சாப்பிட்டுவிட்டார்களா" என்று கேட்க,

அவன் மனைவி "இல்லை" என்று சொன்னதோடு "அவர்களுக்கு என்ன அவசரம்?" என்றும் கேட்டாள்.

குடியானவனுக்கு வந்ததே கோபம். "தாயும்,தந்தையும் பசித்திருக்கச் சாப்பிடச் சொல்கிறாயா? படுபாவி! உன் கையில் சாப்பிடுவது மகாபாவம்"என்று கூறி அவள் கொண்டு வந்த சாப்பாட்டைத் தூக்கி வீசினான் குடியானவன்.

"இக்குடியானவனையா மட்டமானவன் என்கிறீர்கள்?" என்று வசிட்டர் வினவ, தலைகவிழ்ந்தார் விசுவாமித்திரர்.

★★★

## ஏகபாத மூர்த்தி

திருவொற்றியூர் அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில் முதலான பல திருக்கோயில்களில் ஏகபாத மூர்த்தி என்ற அரிய திருவுருவம் அமைந்து விளங்கக் காணலாம்.



பிரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூவரும் ஒருவரே என்பதை உணர்த்தும் இம் மும்மூர்த்திகளின் மூன்று திருவுருவங்களும், இணைந்த நிலையில் ஒரே காலில் ஏகபாத மூர்த்தியாகத் திகழக் காணலாம்.

# மகாபாரதம்

முனைவர் த.அமிர்தலிங்கம்

13

எல்லோரும் வாழவேண்டும் என்ற நல்ல எண்ணம் எல்லோருக்கும் இருந்து விடுமானால், உலகம் அமைதிப் பூங்காவாகத் திகழ்ந்துவிடும் என்பதில் யாருக்கும் எந்த ஐயமும் இருக்க முடியாது .ஆனால் துரியோதனனைப் போன்ற மனிதாபிமானமே சிறிதும் இல்லாத கொடியவர்கள் குடியிருக்கும் உலகில் போர் என்ற ஒன்று நிகழாமல் இறைவனாலும் கூடத் தடுத்துவிட முடியாது என்பதைத்தான் நாம் மகாபாரதக் காவியத்தின் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

தன் சிற்றப்பாவின் மக்களான பாண்டவர்கள் பூமியிலே தோன்றியே இருக்கக்கூடாது என்பது துரியோதனனின் எண்ணம். அவன், பாண்டவர்களுக்கு அடுக்கடுக்காகக் செய்திருக்கும் அநீதிகளுக்கு அளவே இல்லை. துரியோதனன் தன்னிலும் வலிமையான வீமன் சிறப்புப் பெறுவதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல், அவனுடைய பாலப் பருவத்திலேயே ஆற்றிலே கழுமரங்களை நட்டுவைத்து, அதிலே பீமனைக் குதிக்கச் சொல்லி வீமனுடைய உயிர் பறிக்க முயன்று, அந்த முயற்சியிலே தோற்றான். கண்ண பெருமான் வண்டுகளின் வடிவம் தாங்கிக் கழுமரங்கள் தோறும்போய் அமர்ந்து, அங்கே உள்ள ஆபத்தை பீமனுக்கு உணர்த்திய காரணத்தினாலே, ஆற்றின் வேறு பக்கமாகக் குதித்து பீமன் உயிர் தப்பினான்.



வீமன் ஒருவனைக் கொல்லக் குறி வைத்து அம்முயற்சியில் இவ்வாறு தோற்றுப்போன துரியோதனன், பாண்டவர்கள் ஐவரையும் பூண்டோடு அழிக்கத் திட்டமிட்டு அரக்கு மாளிகை ஒன்றை அமைத்து, விருந்துக்குப் பாண்டவர்களை அழைத்து, அவர்கள் உறங்குகின்ற வேளையிலே தீயிட்டுப்பொசுக்க முயன்றான். ஆனால் விதுரர் துரியோதனனின் வஞ்சகத் திட்டத்தை வீமனுக்கு உரிய நேரத்தில் தக்க ஆள் மூலம் எடுத்துரைத்து எச்சரித்த காரணத்தினாலே பாண்டவர்கள் அந்த ஆபத்திலிருந்தும் தப்பிப் பிழைத்துக் கொண்டார்கள்.

இனி துரியோதனன் கண் எதிரில் வாழ்ந்தாலும், தம்மைக் கொல்வதிலேயே பாவி துரியோதனன் குறியாக இருப்பான் என்பதனால்தான், அரக்கு மாளிகைச் சம்பவத்திற்குப் பிறகு பாண்டவர்கள் மாறு வேடத்திலேயே மறைந்து வாழ்ந்தார்கள். அந்த வேளையில் அர்ச்சுனனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதற்கென்றே துருபதராசன் பெற்ற துரோபதையின் சுயம்வர நிகழ்ச்சி வந்தது.

கண்ணபெருமானின் ஏவலுக்கிணங்க அர்ச்சுனன் தன்னை இன்னான் என்று காட்டிக்கொள்ளாமலேயே, சுயம்வரப் போட்டியிலே கலந்து கொண்டு தன்னுடையவில் திறமையைக் காட்டி வென்றான். வென்றவன் அர்ச்சுனனாகவே இருக்க முடியும் என்று ஐயப்பட்ட துரியோதனன் அந்த நேரத்திலும் சுயம்வரத்திற்கு வந்திருந்த கர்ணன் உள்ளிட்டபல தேசத்து அரசர்களையும் தூண்டிவிட்டு அர்ச்சுனனைக் கொல்ல முயன்றான்.

ஆனால் அர்ச்சுனனும் வீமனுமாக இணைந்து தங்கள் வீரபராக்கிரமத்தைக் காட்டித் தாங்கள் வென்றதோடு மட்டுமல்லாமல் துரியோதனனின் அரக்கு மாளிகை சூழ்ச்சியையும் அம்பலப்படுத்தினார்கள்.

அதன் பிறகுதான் பாண்டவர்களுக்குரிய குரு நாட்டுரிமையை வழங்கியாக வேண்டிய கட்டாயத்தின் பேரில், திருதராட்டிரன் தருமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினார். ஆனால் அதைப் பொறுக்க முடியாமல் துரியோதனன் பொறாமை கொண்டு, தன் புகைச்சலைக் காட்ட, அத்தினாபுரத்தில் இனி தாம் தங்கியிருக்க வேண்டாம் எனக் கருதி பாண்டவர்கள் இந்திரப் பிரத்தம் என்ற புதிய நகரையே நிர்மாணித்து அங்கே தங்கி வாழ்ந்து வந்தார்கள்.

அப்போதுதான் இந்திரபிரத்த நகருக்குவருகை புரிந்த மகரிஷி நாரதர், சொர்க்கத்தில் வாழும் பாண்டவர்களின் தந்தை பாண்டு தம்மைந்தர்கள் இராஜசூய யாகத்தை நிகழ்த்தவேண்டும் என்று விரும்பிதைத் தருமரிடத்தில் தெரிவிக்க, கண்ண பெருமானின் திருவருளால், உலகம் போற்ற அவர்களும் மிகச் சிறப்பாகச் செய்து முடித்தார்கள்.

அந்த யாகத்திற்கு வருகை புரிந்து, பாண்டவர்களின் இந்திரபிரத்த நகரின் சிறப்பையும், அவர்கள் நிகழ்த்திய யாகத்தின் சிறப்பையும் நேரில் கண்டு பொறாமையால் மனம் நொந்து வெந்த துரியோதனன், பாண்டவர்களை எப்படியும் இனி வாழ விடாமல் கெடுத்தே ஆகவேண்டும் என்று சகுனியின் உதவியோடு சதித்திட்டம் தீட்டித் தானும் புதிதாக ஒரு மண்டபத்தை அத்தினாபுரத்தில் அமைத்து அதைக்காணப் பாண்டவர்களை வரவழைத்து விருந்துக்கு முன் சூதாடலாமே என விநயமாக தருமரை அழைத்தான்.

**சூதாட்டம் எவ்வளவு கொடியது என்பதைத் தரும நெறி தழைக்க வந்த தருமரும் மிக நன்றாகவே அறிவார். அதனால்தான் சூதின் தீமையை அவர்,**

**"அடியும் ஆண்மையும்வலிமையுஞ் சேனையும்**
**அழகும் வென்றியுந் தத்தம்**

# நந்தவனத்



**குடியும் மானமுஞ் செல்வமும் பெருமையும்**
**குலமும் இன்பமும் தேசும்**
**படியு மாமறை ஒழுக்கமும் புகழும்முன் பயின்ற**
**கல்வியும் சேர**
**மடியுமால் மதியுணர்ந்தவர் சூதின்மேல்**
**வைப்பரோ மனம் வையார் "**
(சூது போர்ச் சருக்கம் 65)

என்று கூறி மறுத்தார்.

ஆனால் சகுனியோ விடாமல், "சூதாடுவதில் வஞ்சமொன்றும் இல்லை, பாச்சிகையைத் திறமையாக உருட்டி விளையாடும் சூது விளையாட்டும் ஒரு ஆண்மை விளையாட்டே" என்று வற்புறுத்திக் கூறினான். அருகிலிருந்த கர்ணனும் "சூது போர் புரிதற்கே அஞ்சி நடுங்குகின்றாயே! மோதுபோரில் எப்படி நடுங்குவாயோ?" என்று கேலி பேசினான்.

அது கேட்டுப் பொறுக்க முடியாமல் அர்ச்சுனன் "தகாத சொல் கூறிய உன் வாயைத் துணிப்பேன்" என்று கர்ணன் மேல் பாய, தருமத்தின் வடிவமாகிய தருமரும் இப்படி உண்டான வாக்குவாதத்தையும்அதனால் விளைந்த வம்புச் சண்டையும்தவிர்க்கும் பொருட்டு, "சரி சரி சூதாடுவோம்" என உடனே உடன்பட்டார், அப்படி உடன்பட்டுத்தான் பொன்னை இழந்து, பொருளை இழந்து, மண்ணை இழந்து, மாடும் இழந்து தம்பிகளை இழந்து, தன்னை இழந்து துரியோதனனின் வஞ்சகத் திட்டத்தால் வசைக்காளானார் தருமர்.

அரசருக்கு அரசராய் இராசசூய யாகத்தைச் சிறப்புற முடித்த பாண்டவர்கள் இப்படி துரியோதனனின் பொல்லாத சூழ்ச்சியால் சில நாழிகை நேரத்தில், எல்லாம் இழந்த ஆண்டிகளாய் ஆனார்கள். நேரம் எப்பொழுது கிடைக்கும், பாண்டவர்களைச் சின்னாபின்னப்படுத்திச் சிரித்து மகிழ்வோம் என்று காத்திருந்த துரியோதனன்,

## திருப்பணி

திருஅண்ணாமலை, அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில் ஐந்தாம் பிரகாரத்தில், புதியதாக நந்தவனம் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டு, 06.04.2005 அன்று ஆணையர் திருமிகு த.பிச்சாண்டி இ.ஆ.ப., அவர்கள் நந்தவனத் திருப்பணியைத் தொடங்கி வைத்தார்கள்.

துரோபதையைச் சபை நடுவே அழைத்து வந்தும் துச்சாதனனைக் கொண்டு துகிலுரிந்தும் பலப்பல கொடுமைகள் புரிந்தான். ஆனால் பரந்தாமன் கண்ணனின் திருவருளால் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற பழமொழிக்கேற்ப அதிசயம் நிகழ்ந்து பாஞ்சாலி கட்டியிருந்த ஆடை துச்சாதனன் இழுக்க இழுக்க மென்மேலும் வளர்ந்து கொண்டே இருந்தது.

**"ஆறாகி யிருதடங்கண் அஞ்சனவெம் புனல்சோர**
**அளகஞ் சோர**
**வேறான துகில்தகைந்த கைசோர மெய்சோர**
**வேறோர் சொல்லும்**
**கூறாமற் கோவிந்தா கோவிந்தா என்றரற்றிக்**
**குளிர்ந்து நாவில்**
**ஊறாத அமிழ்தூற உடல்புளகித் துள்ளமெலாம்**
**உருகி னாளே."**

(சூது போர்ச் சருக்கம்- 247)

**"உடுத்த துகில் உணர்விலான் உரிந்திடவும்**
**மாளாமல் ஒன்றுக் கொன்றாங்கு**
**அடுத்த நிறம் பற்பலபெற் றாயிரமா யிரங்கோடி**
**யாடையாய்க்**
**கொடுத்தருள் புரிந்தனபட்டிருந்த பெருந்தனிக்**
**கூடம் கொள்ளாதோடி**
**எடுத்தனர் பற்பல வீரர் உரிந்தோனும் சலித்திருகை**
**யிளைத்து நின்றான்"**

(சூது போர்ச் சருக்கம் 249)

ஆயிரம் கோடி ஆடைகள் பலவேறு வண்ணங்களில், துச்சாதனன் உரிய உரிய வளர்ந்த வண்ணமே விளங்கி, அதை அள்ளிப் போட்ட வீரர்கள் மயங்கி விழுந்தனர். துச்சாதனனும் தன்னுடைய இருகை சலித்து இளைத்து நின்றான்.

இந்த ஒப்பற்ற காட்சியைப் பார்த்து, அருந்ததி அனையாளாம் துரோபதையின் கற்பின் திறத்தை வியந்து, வானவர் பூமாரிப் பொழிந்தனர். வீடுமர் கைகுவித்து துரோபதையை வணங்கி நின்றார். விதுரர் வணங்கி நின்றார். துரோணர் தொழுது நின்றார். அப்பொழுதேனும் தன்னுடைய அடாத செயல்குறித்து அதிர்ச்சி அடைந்தானா துரியோதனன் என்றால் இல்லவே இல்லை. "அவளை இழுத்து வந்து என்னுடைய தொடை மீது இருத்து" என்றுநாகூசாமல் துச்சாதனனுக்குப் புதிய உத்தரவு இடலானான் அரக்கன் துரியோதனன்.

மண்ணின் பொறுமைக்கும், மண்ணனைய பெண்ணின் பொறுமைக்கும் கூட எல்லையுண்டல்லவா! அதுவரைக்கும் அழுது அரற்றிக் கொண்டிருந்த துரோபதை, துரியோதனன் தன் தொடையைக் காட்டிச் சொல்லவொண்ணாத சொல் ஒன்றைக் கூறியவுடனே கொதித்தாள், துட்டனைச் சபித்தாள். **"புன்தொழிலோன் யானிருக்கக் காட்டியதன் தொடைவழியே புள்வாய்க் குத்தச் சென்றிடுக ஆருயிர்"** என்று சபித்த துரோபதை, துச்சாதனன் பிடித்துத் தன்னை தரதரவேன இழுத்து வந்ததால் அவிழ்ந்த தன்னுடைய கூந்தலைக் காட்டி மேலும் சபதம் செய்தாள்.

**"அரசவையில் எனையேற்றி அஞ்சாமற் துகில்**
**தீண்டி அளகந்தீண்டி**
**விரை செய் அளி இனம்படிதார் வேந்தர் எதிர்**
**தகாதனவே விளம்புவோரைப்**
**பொருசமரில் முடிதுணித்துப் புலால்நாறு**
**வெங்குருதி பொழிய வெற்றி**
**முரசறையும் பொழுதல்லால் விரித்த குழல்**
**இனியெடுத்து முடியேன் என்றாள்"**

(சூது போர்ச் சருக்கம் 255)

துரியோதனாதியாரைப் போரிலே கொன்று, ஜெய பேரிகையை முழக்கி, அவர்களுடைய உடலிலிருந்து பாயக் கூடிய இரத்தத்தை வாரி என் கூந்தலில் தடவி, அவிழ்ந்த கூந்தலை முடிப்பேனேயல்லால், அது வரை அவிழ்ந்த என் கூந்தல் முடிக்க மாட்டேன் என்பது துரோபதை கூறிய வீரசபதம் ஆகும்.

சத்துருகாதினி என்ற தன் கதையால் துரியோதனாதியரின் கதையை அப்பொழுதே முடித்து விட ஆவேசம் கொண்டிருந்தவனாகிய வீமனும், துரியோதனனையும், அவன் தம்பியர் அனைவரையும் கொல்வேன், துரோபதையின் கூந்தலைப் பிடித்து இழுத்து வந்து, அவளது ஆடையைக் களைந்தவனாகிய துச்சாதனனது உடலிலிருந்து பெருகுகின்ற இரத்தத்தை வாரிக் குடித்து, என் உள்ளமும் உடலும் குளிர்வேன். அதற்கு முன்னால் என்னுடைய கைகளினால் நீர் அள்ளிப் பருகமாட்டேன். என்னுடைய கதாயுதத்தால் நீரைமோதி மேலே தெரிக்கிற நீர்த்துளிகளையே அது நாள் வரை பருகுவேன் என்பதாகக் கொடிய சபதம் செய்து

## சிவபெருமானுக்கு உகந்த மலர்கள்



1. கொன்றை
2. வில்வம்

தாழம்பூ சிவபெருமானுக்கு உகந்தமலர் அல்ல.

"வண்டாரும் குழல்பிடித்துத் துகிலுரிந்தோன்
உடற்குருதி வாரியள்ளி
உண்டாகங் குளிர்வதன்முன் இக்கரத்தாற்
புனலுண்ணேன் ஒருகால் என்கைத்
தண்டால்வெம் புனலெற்றி மீ தெழுந்து
விழுந்திவலைத்தண்ணீராகக்
கொண்டாவி புரந்திடுவேன் இது விரதம்"

(சூது போர்ச் சருக்கம் 257)

என்று முழக்கமிடுகின்றான்.

கர்ணன் தருமனைக் கேலி செய்து "சூது போருக்கே நடுங்குகிறாயே! மோதுபோரில் என்ன ஆவாயோ" என்று கூறிச் சிரித்தான் அல்லவா! அவன் உயிரைத் தான் தன்னுடைய காண்டீபத்தால் கொல்வேன் என்பதாக அர்ச்சுனனும் சபதம் செய்ய, பொய்ச் சூதினால் பொல்லாங்கு சூழ்ந்த சகுனியைத்தான் கொல்வதாக சகாதேவனும், சகுனியின் மகனைக் கொல்வதாக நகுலனும் சபதம் செய்தனர்.

திரௌபதியும், வீமன் முதலான பாண்டவர்களும் இவ்வாறு சபதம் செய்த பொழுது பூமி கிடுகிடுவென நடுங்கிப் பெரிய பூகம்பமே நிகழ்ந்தது, அதனைக் கண்டு பயந்துபோன திருதராட்டிரன், துரோபதையிடம் துரியோதனன் செய்த பிழைகள் அனைத்தையும் பொறுக்க வேண்டுமென மன்றாடி சூதில் பாண்டவர்கள் தோற்ற பொருள்கள் அனைத்தையும் தந்து விடத்தான் இசைவதாகவும் கூறி கெஞ்சினான்.

ஆனால் துரியோதனனும் சகுனியும் அதற்கு இசையாமல் பனிரெண்டு ஆண்டுக்காலம் வனவாசமும், ஓராண்டுக் கால அஞ்ஞாத வாசமும் பாண்டவர்கள் போய் திரும்பி வந்தால், அவர்களுடைய நாட்டின் உரிமையை வழங்குவதாகக் கூறினர்.

"அரிவையோ டகன்று நீவீர் ஐவரும் அடவி எய்திச்
சுரர் தினம் ஈராறு அங்கண் துன்னுதிர் மன்னு
நாட்டின்
ஒருவரும் அறியா வண்ணம் ஒரு தினம்
உறைந்திருங்கள்
பெருவிறல் அரசும் வாழ்வும் பின்னுறப்
பெறுதிரென்றான்"

(சூது போர்ச் சருக்கம் 276)

இவ்வாறான உறுதிமொழியை துரியோதனன் உடன்பட்டுக் கூறிய பிறகு, தருமர் தன்னுடைய புண்ணியத்தையெல்லாம் பணயம்வைத்து மீண்டும் சூதாடித் தம்மையும் துரோபதையையும், அச்சூதில் வென்று மீட்டுக் கொண்டு கானகம் போனார்.

பதின்மூன்றாண்டுக் காலம் பாண்டவர்கள் கடும் துன்பங்களுக்கு ஆளானார்கள். காட்டிலே பாண்டவர்கள் வாழ்ந்த போதும் கூட துரியோதனன் அவர்களை வஞ்சகமாய்க் கொன்று விட பல முறை சூழ்ச்சிகளைச் செய்து தோற்றுப்போனான். இறுதியாக ஓராண்டுக்காலக் கரந்துறை வாழ்வின் போதும் பாண்டவர்களை எப்படியேனும் கண்டு பிடித்து அவர்களை மீண்டும் கானகத்திற்கே அனுப்பிவிடவேண்டும் என்ற வஞ்சக எண்ணத்தால் அவன் செய்த முயற்சிகள் பலவும் கூட தோற்றே போயின.

இப்படிப் பாண்டவர்கள் வாழ்வதே கூடாது என்ற பகையெண்ணம் கொண்டவனாகிய துரியோதனன் எப்படிச் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டுத் தன்னுடைய உறுதிமொழிக் கிணங்க, பாண்டவர்களுக்கு உரிமை உடைய அரசாட்சியை வழங்குவான்?

தருமர் பொறுமையின் சின்னமாய் உலூக முனிவரை துரியோதனனிடம் தூதனுப்பிப் பார்த்தார். போர் என்ற ஒன்று நடக்குமானால் அதனால் விளையக் கூடிய பாதகங்கள் கொடியனவாக இருக்குமே என்று எண்ணியும், தமக்கு இன்னல்கள் பல செய்த போதும் துரியோதனாதியரைத் தம்பியராக மதித்துமே போர் வேண்டாம் என்று தருமர் விரும்பினார். ஐந்து ஊர் கொடுத்தால் போதும், ஐந்து தெரு கொடுத்தால் போதும், அதுவும் கொடுக்க மனம் இல்லாவிட்டால் ஐந்து வீடுகள் கொடுத்தாலும் போதும் என்று கண்ணபெருமானையே தூதனுப்பிக் கேட்டுப் பார்த்த தருமருக்கு கிடைத்த பதில் "ஈ அமரும் இடமேனும் ஈயமாட்டேன்" என்பதுதான்.

இப்படி இருசாராரில் ஒரு சாரார் எவ்வளவு தான் விட்டுக் கொடுத்துப் போனாலும், மறு சாரார் கொஞ்சமும் இணங்கி வரவில்லையானால் ஈசனே விரும்பினாலும் எப்படிப்போரைத் தடுத்து நிறுத்தி விட முடியும்? பாஞ்சாலி அவிழ்ந்த கூந்தலுடன் பதின்மூன்றாண்டுக் காலமாக அல்லல்பட்டுக் கொண்டிருந்தாள். வீமனும் கைகளால் நீர் பருகிக் காலம் பதின்மூன்றாண்டுகள் ஓடிப் போய் விட்டன. மூளை, வாயின் வழி, வெளியே வருமாறு பாடம் புகட்டாவிட்டால், துரியோதனன் திருந்தமாட்டான் என்பது அனைவருக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து விட்டது. ஆதலால் தான் துரியோதனனின் கொடிய பாவங்கள் அனைத்திற்கும் முடிவுகட்ட போர் நடந்தே தீரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது.

*(தொடரும்)*

# திரு ஞானசம்பந்தர் பாடிய திரு ஆலங்காட்டுப் பேய்

## நீலியின் சரிதம்

கற்றோர் போற்றும் காஞ்சி மாநகரில் ஞானாதிபன் என்னும் அந்தணர் ஒருவர் வசித்து வந்தார். ஒழுக்க நெறியிலும், சிவபக்தியிலும் சிறந்த அப்பெரியாரின் மனைவிக்குத் தக்க பருவத்தில் ஆண்குழந்தை ஒன்று பிறந்தது.

புவனபதி என்று பெயரிட்டு அக்குழந்தையைச்சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர். தக்க பருவம் எய்தியதும் புவனபதிக்கு முறைப்படித் திருமணம் செய்து வைத்தனர். சிறிது காலம் இல்லறத்தில் ஈடுபட்டு மகிழ்ந்திருந்த புவனபதி புனிதத் தலங்களைத் தரிசித்து ஆன்ம ஈடேற்றம் பெறவிரும்பினான்.

எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய தென்னாடுடைய சிவனைத் திருத்தலங்கள் தோறும் தரிசித்து மகிழ்ந்து, காசியம்பதி சென்று, சிறிதுகாலம் தங்கி, கங்கையில் நாள்தோறும் முறைப்படி நீராடி காசி விஸ்வநாதரைத் தரிசித்து வாழ்ந்து வந்தான்.

காசி நகரின் மற்றொரு பகுதியில் சத்தியஞானி என்னும் அந்தணர் சிவக்கியானி என்னும் மகனுடனும், நவக்கியானி என்னும் மகளுடனும் வசித்து வந்தார். அவர் புவனபதியின் ஒழுக்கநெறியையும், தவநெறியையும், அழகையும் கண்டு மகிழ்ந்து தன்வீட்டிற்கு விருந்தினராகத் தங்கி இருக்கும்படி அழைத்தார்.

அவரது அழைப்புக்கு இணங்கிப் புவனபதியும் அவரது இல்லத்தில் சிலநாள் தங்கி இருந்தான். அவனது நன்னடைத்தையால் கவரப்பட்ட சத்தியஞானி தனதுமகளான நவக்கியானியைக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார். பெண் மோகத்தில் மதிமயங்கிய புவனபதி தனக்கு ஏற்கனவே திருமணமாகி



மனைவி காஞ்சிபுரத்தில் இருப்பதைச் சொல்லாமல் மறைத்துவிட்டான்.

காசியில் இருந்து இரண்டாம் மனைவியுடன் இன்பம் துய்த்துச் சில மாதங்கள் வாழ்ந்துவந்த அவன் சொந்த ஊராகிய காஞ்சியம்பதிக்கு வரத் தீர்மானித்தான். இச்செய்தியை அறிந்த நவக்கியானி நானும் உங்களுடன் வருவேன் என்று கூறிப் புறப்பட்டாள். அவளுடைய சகோதரனாகிய சிவக்கியானி, உங்கள் இருவரையும் முறைப்படி அழைத்துச் சென்று சொந்த வீட்டில்குடியமர்த்திவிட்டு வருவேன் என்று சொல்லி அவர்களுடன் காஞ்சிக்குப் புறப்பட்டான். மறுப்பு ஏதும் சொல்ல முடியாதவனாய்க் குழப்பத்தோடு மனதைத் தேற்றிக் கொண்ட புவனபதி அவர்கள் இருவருடன் தன் சொந்த ஊர்நோக்கிப் புறப்பட்டான். சொந்த ஊர் நெருங்க நெருங்க இரண்டாம் மனைவியை எப்படித் தன் ஊருக்கு அழைத்துப் போவதுஎனத் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினான்.

மாலைப்பொழுது மங்கிய வேளையில் திரு ஆலங்காட்டை அடைந்த அவர்கள் மூவரும் அங்கேயே அந்த இரவைக் கழிக்க முடிவு செய்தார்கள். முதல் மனைவிக்கும் உற்றார், உறவினர்களுக்கும் பயந்து உடன் வந்த இருவரையும் கொலை செய்யப் புவனபதி முடிவு செய்தான்.

தனது மைத்துனனாகிய சிவக்கியானியைக் குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டுவர அனுப்பிவிட்டு தன்தோள் மீது இருந்த துண்டை எடுத்துத் தனது இரண்டாம் மனைவியாகிய நவக்கியானியின் கழுத்தை இறுக்கிக் கொன்று கீழே கிடத்திவிட்டு மைத்துனன் வருவதற்குள் விரைந்து காஞ்சியை நோக்கிப் புறப்பட்டான்.

தண்ணீர்க் குடத்துடன் வந்த சிவக்கியானி தன்



# வஞ்சப்படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகை கேட்டஞ்சும் பழையனூர்

- திருஞானசம்பந்தர்

தங்கை கொலையுண்டிருப்பதைக் கண்டு அவறித் துடித்துப் புரண்டு புரண்டு அழுதான். உடன்பிறந்த தங்கை கொலையுண்ட பின் வாழ மனமின்றிப் பக்கத்தில்இருந்த புளியமரத்தில் சுருக்கிட்டுக்கொண்டு தானும் உயர் துறந்தான்.

அகால மரணம் அடைந்த சிவக்கியானி நவக்கியானி இருவரும் முறையே நீலன், நீலி என்னும் பெயருடன் பேய் வடிவாகிப் புவனபதியைப் பழிக்குப் பழிவாங்க எண்ணித் தக்க சமயம் பார்த்துத் திரு ஆலங்காட்டில் சுற்றித் திரிந்து வந்தனர்.

மனைவியைக் கொன்ற புவனபதி மறுபிறவியில் நாகநந்தை என்ற வைசிய குலத்தவர்களுக்கு மகனாகப் பிறந்து தரிசனன் எனப்பெயர் பெற்று வளர்ந்துவந்தான்.

அவனது ஜாதகத்தைப் பார்த்த சோதிட நூல் வல்லுநர்கள் ஒரு கத்தியைச் செய்து அதில் பேயை விலக்கி வைக்கும் பைசாச மந்திரத்தை உருஏற்றி "இந்தக் கத்தி இருக்குமளவுக்கும் எந்தத் தீங்கும் நேராது. ஆனால் இவன் வடபகுதி போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று சொல்லிச் சென்றார்கள்.

தரிசனன் உரிய வயதடைந்ததும் காஞ்சிபுரத்தில் கொற்றந்தைச் செட்டி என்பவரின் மகளைத் திருமணம் செய்துகொண்டு அவள்மூலம் ஓர் ஆண்குழந்தையையும் பெற்றெடுத்தான். அவனது தந்தையான நாகநந்தைச் செட்டி அவனுக்கு முற்பிறப்பின் இரகசியத்தைக் கூறிமந்திரம் உரு ஏற்றப்பட்ட கத்தியைக் கொடுத்து, நீ எந்தக் காரணம் கொண்டும் வடதிசை நாடுகளுக்குப் போகக் கூடாது என்றுசொல்லி சில நாளில் இறந்துவிட்டார்.

திருஆலங்காட்டிற்கு அருகில் அமைந்த பழையனூரில் வேளாளர் குலத்தில் புரிசைக்கிழார் என்பாரும், அவரது மனைவியான திருப்பச்சை நாச்சியாரும் பிள்ளைப்பேறு இல்லாமல் வருந்தினர். தமது குறையைக் களைய ஆலங்காட்டு அப்பனை வேண்டித் தவம் இருந்தனர். ஐயனின் திருவருளால் திருப்பச்சை நாச்சியார் கருவுற்றாள், அக்கருவில் பேய்களாய்ச் சுற்றித் திரிந்த நீலனும் நீலியும்இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தனர்,

இக்குழந்தைகள் இருவரும் பகலில் தொட்டிலில் படுத்து உறங்குவார்கள்.

# உருத்திராக்க முகங்களும் மகிமையும்



| | | |
|---|---|---|
| ஒரு முகம் | - பரமாத்மாவின் ஸ்வரூபம் | - பரமாத்மாவுடன் கலத்தல் |
| இருமுகம் | - அர்த்த நாரீஸ்வரர் ஸ்வரூபம் | - சகல நலங்கள் உண்டாகும் |
| மூன்று முகம் | - அக்னி ஸ்வரூபம் | - இரத்தக் கொதிப்பு நீங்கும் |
| நான்குமுகம் | - பிரம்ம ஸ்வரூபம் | - சற்புத்திர சந்தானம் கிட்டும் |
| ஐந்து முகம் | - சதாசிவரூபம் | - பிரம்ம ஹத்தி விலகும் |
| ஆறுமுகம் | - சுப்பிரமணிய ஸ்வரூபம் | - ஐஸ்வர்யம் கிடைக்கும் |
| ஏழுமுகம் | - சப்தமாதா ரூபம் | - ஸத்புத்தி உண்டாகும். |
| எட்டு முகம் | - அட்டவசுக்கள் ரூபம் | - சத்தியவந்தர் ஆவர் |
| ஒன்பது முகம் | - நவசக்தி ரூபம் | - மகாசக்திமான் ஆவர் |
| பத்துமுகம் | - யமனுடைய ரூபம் | - தீர்க்காயுள், யமபயம் இல்லை |
| பதினொரு முகம் | - ஸ்ரீருத்ர சொரூபம் | - சிவசாயுச்யம் பெறுவர் |
| பன்னிருமுகம் | - சூரிய சொரூபம் | - கண்நோய் நிவர்த்தி ஆ கும். |
| பதின்மூன்று முகம் | - மன்மத ஸ்வரூபம் | - அழகிய வடிவம் |
| பதினான்கு முகம் | - சகல தேவதா ரூபம் | - சகலவியாதியும் போகும். |

நடுஇரவில்பழைய பேயுருவு கொண்டுகொட்டிலில் அடைக்கப்படடுள்ள ஆடு மாடுகளைக் கொன்று தின்று, பின்னர் பழையபடி குழந்தைகளாகித் தங்களது தொட்டிலில் வந்து படுத்துறங்குவார்கள்.

இப்படியே தினம் தினம் ஆடு, மாடுகள் அழிந்து போவதைக் கண்டு கால்நடைகளின் உரிமையாளர்கள் காவலர்களைத் தண்டிக்கவே, காவலர்கள் நடு இரவு நேரத்தில்மறைந்திருந்து கண்காணிக்கத் துவங்கினார்கள். பேய்உருவில் ஆடுமாடுகளைக் கொன்று தின்று விட்டுப் புரிசைக்கிழார் வீட்டிற்குள் சென்று, பேய் உருவங்கள் மறைந்ததைக் கண்டுகாவலர்கள் இச்செய்தியை விடிந்தவுடன் புரிசைக்கிழாரிடம் எடுத்துரைத்தனர்.

"அவர் இன்று நாமே கவனிப்போம்" என்று விழித்திருந்து பார்த்தபோது குழந்தைகள் பேயாவதையும், ஆடு, மாடுகளைக் கொன்று தின்றுவிட்டு மீண்டும் குழந்தைகளாய் உருமாறித் தொட்டிலில் கிடப்பதையும் கண்டு பயந்து "இது என்ன பாவமோ? " என வருந்தி, இக்குழந்தைகளைக் கொன்று விடுவதுதான் நல்லது என உணர்ந்தார். ஆனால், குழந்தைப் பேறு கிட்டாத நமக்கு சிசுக் கொலைப் பாவம் தேவையில்லை என்று உணர்ந்து அக்குழந்தைகளைத் தொட்டிலோடு எடுத்துச் சென்று நடராஜப்பெருமான் சன்னதிக்கு அருகில் இருந்த ஒரு வேலமரத்தில் கட்டி வைத்துவிட்டு வீடு சேர்ந்தார்.

இரண்டு குழந்தைகளும் பழைய உருக்கொண்டு தம்மை உணர்ந்துகொண்டார்கள். "நாம் இருவரும் ஒரே இடத்தில் இருந்தால்நம்மை கொலை செய்தவனை நாம் பழிவாங்க இயலாது, எனவே, நீ மட்டும் இந்தக் காட்டிலேயே இரு. நான் திருச்செங்கோடு போய் அங்குள்ள வேலமரத்தில் தங்கி இருப்பேன் என்று சொல்லிவிட்டுத் தமயனின் உத்தரவு பெற்று நீலி திருச்செங்கோடு சென்று அங்கு தங்கிவிட்டாள்.

நீலன் மட்டும் ஏற்கனவே தங்கியிருந்த திருவாலங்காட்டு வேலமரத்திலேயே தங்கி இருந்தான். ஒருநாள் பழையனூரில் உள்ள வேளாளர்கள் தமது உழவிற்குக் கலப்பை மரம் தேவைப் படவே செழிப்பாக இருந்த அந்த வேலமரத்தை வெட்டிக் கொண்டு போய் விட்டார்கள். தான் தங்கி இருந்த வேலமரம்வெட்டப்பட்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்த நீலன் அவர்களைப் பழிவாங்க எண்ணம் கொண்டான்.

பழையனூரில் வாழ்ந்துவந்த குருக்கள் ஆலங்காட்டு அப்பனுக்குப் பூஜை செய்து முடித்துப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு தம் வீட்டுக்கு வந்தபோது பேயாய் இருந்த நீலன் அவரை நையப்புடைத்து அவரிடமிருந்த நிவேதனத்தை பறித்துக் கொண்டான். மறுநாள் குருக்கள் தாம் பட்ட துன்பத்தை நடராசப் பெருமானிடம் கூறி முறையிட்டார். தம் பூசைக்கு இடையூறு செய்த நீலனைத் தண்டிக்க எண்ணிய இறைவன். தன் கணநாதனாகிய குண்டோதரனை அனுப்பி நீலனைக் கொல்லச் செய்தார்.

இச்செய்தியை அறிந்த திருச்செங்கோட்டில் உள்ள நீலி விரைந்து புலம்பித் தன் தமையனின் மறைவுக்கு மூல காரணம் வேளாளர்கள்தான் என்று உணர்ந்தாள். தன் குறிக்கோளாகிய முற்பிறவிப் பழியையும், தன் சகோதரனின் மறைவுக்குக் காரணமான வேளாளர்களையும் ஒருசேரப் பழிவாங்குவதாகச் சபதம் பூண்டு தக்க தருணத்தை எதிர்பார்த்துத் திருவாலங்காட்டில் காத்திருந்தாள்.

(அடுத்த இதழில் நிறைவு பெறும்)

# ? பதில்



★ அரு. சுப்பிரமணியம், திருவாரூர்

கேள்வி : *திருவாரூர்த் திருக்கோயிலில் தேவாரம் ஓதும் ஓதுவா மூர்த்திகள் தேவாரம் ஓதுமுன்னும், ஓதிமுடித்த பின்னும் "திருச்சிற்றம்பலம்" என்று கூறும் மரபைக் கடைப்பிடிப்பதில்லையே! இது ஏன் என்று விளக்குக.*

பதில் : சைவர்களுக்குக் கோயில் என்றால் தில்லையைத்தான் குறிக்கும். ஆனால் அதனினும் மேம்பட்டதாக விளங்கும் திருத்தலம் திருவாரூர் ஆகும்.

உலகம் படைக்கப்படும்போது முதன் முதல் உருவாக்கப்பட்ட தலம் என்ற பெருமைக்குரியது திருவாரூர் திருத்தலம். இதனை அப்பரடிகள் தேவாரத்தில்

"ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ..
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்று குறிப்பிடுகின்றார். மேலும் தில்லையில் ஆடற்பெருமான் கோயில் கொள்வதற்கு முன்னமே திருவாரூரில் கோயிற்கொண்ட சிறப்பையும்

"மல்கு தில்லை
மணிதிகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை
ஆடுவதன் புகுவதற்கு முன்னோ பின்னோ
அணிஆரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்றும் பாடுகிறார்.

தில்லைக்கு மூத்த பதி திருவாரூர் என்ற சிறப்புப் பற்றியே திருவாரூரில் தேவாரம் ஓதும் ஓதுவாமூர்த்திகள் தில்லையைச் சிறப்பிக்கும் "திருச்சிற்றம்பலம்" என்பதைக் கூறுவதில்லை.

★ கமலச் செல்வி, வடலூர்

கேள்வி : *அருளாளர்கள் அன்னதானம் செய்த அருள்வரலாறுகள் பலவற்றைப் படித்துள்ளேன். அவற்றில் ஒருவர் உண்ணும் அளவிருந்த சிறியஅளவு அன்னம் கொண்டு மிகப் பலருக்கும் வயிறார உணவு படைத்து மகிழ்ந்ததாகக் கூறப்படும் அதிசயங்களும் உள்ளன. இது எவ்வாறு சாத்தியம் என்பதை விளக்க முடியுமா?*

பதில் : அட்சயப் பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு பருக்கையைக் கொண்டு, துர்வாச முனிவரின் பசியைத் திரௌபதி தீர்த்தவரலாறு மகாபாரதத்தில் உள்ளது.

இயேசு பெருமான் ஒரு சிறு அப்பத்தைக் கொண்டு கணக்கிலா மக்களின் பசிப்பிணியைத் தீர்த்ததாகப் பைபிளும் கூறுகின்றது.

இது எவ்வாறு சாத்தியம் ஆகிறது என்பதைச் சான்றோர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள். பயபக்தியுடன் அன்னதானம் செய்யப்படும் இடங்களில் கண்ணுக்குத் தெரியாத சித்தர்கள் பலர் எழுந்தருள்வது வழக்கமாகும். அன்னதானம் செய்யப்படும் உணவை அச்சித்தர்களும் சிறிது சுவை பார்ப்பார்கள். அவர்கள் திருப்தியடைந்து மனமகிழ்வோடு "வளர்க" என வாழ்த்துவார்கள். சித்தர்கள் ஆசியால் அன்னமும் வளரும். எதிர்பாராது உண்ண வருவோர் மிகப் பலராக இருப்பினும், சித்தர்கள் ஆசியால் அன்னம் அனைவருக்கும் மனநிறைவைத் தரும் வகையில் போதுமானதாக வளர்ந்து விடும் என்பது கண்கூடான உண்மையாகும்.

★ தீபச் செல்வி, பவானி

கேள்வி : *தினமும் பூசைசெய்யும் போது திருவிளக்கில் என்ன எண்ணெய் இட வேண்டும் என்பதை விளக்கவும்.*

பதில் : நெய் இடுவது மிகச் சிறந்தது. சகலவித செல்வ சுகமும், நலன்களும் உண்டாகும்.

நல்லெண்ணெய் இடுவதால் எல்லாவித பீடைகளும் விலகிவிடுகின்றன.

விளக்கெண்ணெய் இடுவதால் தேகசுகம், பந்துசுகம், தாம்பத்திய சுகம் விருத்திஆகும்.

நெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், இலுப்பை எண்ணெய், தேங்காய் எண்ணெய், இவை ஐந்தும் கலந்து ஒருமண்டலம் விளக்கேற்றி வழிபட்டால் தேவியின் அருள்கிட்டும். விளக்கேற்ற, கடலை எண்ணெய் கூடாது. இதனால் துன்பமே கூடும்.

# எமதர்மன் கேள்விகளும் தர்மர் உரைத்த பதில்களும்



(யட்சப்பிரச்னம்)

பாண்டவர்களைக் கொல்வதற்காகக் காளமாமுனிவரைவேண்டி ஒரு கொடிய பூதத்தை உண்டாக்கி அனுப்பினான் துரியோதனன். வேள்வித்தீயில் உண்டான அக்கொடிய பூதமும் பாண்டவர்களைத் தேடிப் புறப்பட்டது.

பாண்டவர்களுக்கு நேரவுள்ள கொடிய துன்பத்தை அறிந்துகொண்ட எமதர்மர், தம் புதல்வனான தருமனையும். அவனுடன் பிறந்த நால்வரையும் காத்தருளத் திருவுள்ளம் கொண்டார்.

அதே வனத்தில் தவம்புரிந்து வந்த ஒரு முனிவருடைய மான்தோலை மான் வடிவம் கொண்டு எடுத்துக் கொண்டு விரைந்து ஓடி மறைந்தார் எமதர்மர்.

பாண்டவர்கள் ஆசிரமத்திற்கு விரைந்து ஓடிவந்த அம்முனிவர் "எம் மான் தோல் இருக்கையை ஒருமான் எடுத்து ஓடி மறைவுற்றது, அதனை உடன் தேடித்தர வேண்டும்" என்று முறையிட்டுக் கொண்டார்.

மானைத் தொடர்ந்து ஓடினர் பஞ்சபாண்டவர்கள் ஐவரும்.

பொன்மானைத்தேடி ஓடிய இராமனைப் போலவே, இப்பொய் மானையும் தேடி ஓடிய பஞ்ச பாண்டவர்கள் ஐவரும், மிகுந்த களைப்பு அடைந்தார்கள,

"தம்பி சகாதேவா! அருந்தத் தண்ணீர் கொண்டுவா! இனி ஓரடியும் எடுத்து வைக்க முடியாது" என்று தருமர் ஆணையிட தண்ணீரைத் தேடிப் போனான் சகாதேவன்.

அதே நேரம் ஓரிடத்தில் எமதர்மன் நச்சுப் பொய்கை ஒன்றை உருவாக்கி அதைச் சூழ்ந்த மரத்தில் மறைந்து நின்றான்.

நச்சுப் பொய்கையின் தண்ணீரை அருந்திய அளவில் சகாதேவன் மாண்டு விழுந்தான்

சகாதேவனைத் தொடர்ந்து வந்த நகுலனும், அடுத்து வந்த அர்ச்சுனனும் அவ்வாறே நச்சு நீரை அருந்திச் சுருண்டு விழுந்து மடிந்து போயினர்.

நீரைத் தேடிவந்த பீமன், தானும் நச்சுநீரை அருந்தி இறக்குமுன் "இப்பொய்கைநீர் நச்சு நீர்" என்று கரையில் எழுதி வைத்து மடிந்து போனான்.

நால்வரையும் தேடிவந்த தருமர் ஓரிடத்தில் மயங்கிவிழுந்து மூர்ச்சையானார்.

ஐவர் நிலை இவ்வாறிருக்க காளமாமுனிவரால் ஏவப்பட்ட கொடிய பூதம், பஞ்சபாண்டவர்களைத் தேடி வந்து அவ்வைவரையும் இறந்த நிலையில் கண்டு கடும் கோபம் கொண்டு, மீளவும் காளமா முனிவரை அடைந்து "மாண்டவர்களைக் கொல்ல அனுப்பிய மதியிலியே நீயும் மாண்டுபோ" என்று அம்முனிவர்மேல் பாய்ந்து, முத்தலைச் சூலத்தால் காளமாமுனிவரைக் கொன்று, தான் தோன்றிய வேள்வித் தீயிலேயே மறைந்து போய் விட்டது அக்கொடிய பூதம்.

பூதம் மறைந்தபிறகு, தர்மரும் மூர்ச்சை தெளிந்து மெல்ல எழுந்தார். நச்சுப் பொய்கையை நாடிச் சென்று தம்பியர் நால்வரும் மாண்டுக் கிடக்கக் கண்டார்.

"இப்பொய்கைநீர் நச்சு நீர்" என்று பீமன் எழுதிய குறிப்பையும் கண்ணுற்றார். தான் மட்டும் உயிர்

வாழ நினையாமல் அந்நச்சு நீரை அருந்தி உயிர்விட தருமர் துணிந்த போது எமதர்மன் அசரீரி யாய் "நில் தர்மா நில்! நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதிலைக் கூறியபின் இந்நீரை அருந்து" என்று கூறிக் கேள்விகளைக் கேட்கலானார்.

எமதர்மன் அசரீரியாகக் கேட்கலுற்ற முக்கியமான சில கேள்விகளையும், தருமர் அதற்கு உரைத்த பொருத்தமான பதில்களையும் இங்குநாம் அறிந்து இன்புறலாம்.

**கேள்வி :** சூரியனை உதிக்கச் செய்வது யார்?

**பதில்:** பரம்பொருளே சூரியனை உதிக்கச் செய்கின்றது.

**கேள்வி:** சூரியன் எதில் நிலை பெற்றிருக்கின்றான்?

**பதில் :** சத்தியத்தில் நிலை பெற்றிருக்கின்றான்.

**கேள்வி :** மனிதன் எதனால் பரம்பொருளை அடைகிறான்?

**பதில் :** மனிதன் தவத்தால் பரம்பொருளை அடைகிறான்.

**கேள்வி :** பூமியை விடவும் சுமையானது எது?

**பதில் :** தாய்.

**கேள்வி :** ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது எது?

**பதில் :** தந்தை.

**கேள்வி :** தேசாந்திரம் செல்பவனுக்குத் தோழன் யார்?

**பதில்:** கல்வி.

**கேள்வி :** வீட்டில் இருப்பவனுக்குத் துணை யார்?

**பதில் :** மனைவி.

**கேள்வி :** சாகப் போகிறவனுக்குக் துணைவன் யார்?

**பதில் :** தானம்.

**கேள்வி :** எல்லாவற்றையும் அடக்கும் பெரிய பாத்திரம் எது?

**பதில்:** பூமி.

**கேள்வி :** சொர்க்கம் எதில் முக்கியமாக நிலைபெறுகிறது?

**பதில்:** சத்தியத்தில்.

**கேள்வி :** சுகம் எதில் முக்கியமாக நிலைபெறுகிறது?

**பதில்:** நல்லொழுக்கத்தில்.

**கேள்வி :** சுகங்களில் எது உத்தமமானது-?

**பதில்:** மனநிறைவுதான்.

**கேள்வி :** லாபங்களில் எது உத்தமமானது?

**பதில்:** நோயில்லாமல் இருப்பது,

**கேள்வி :** எதை அடக்கினால் மனிதர்கள் துயரம் அடைய மாட்டார்கள்?

**பதில்:** ஐம்புலன்களை.

**கேள்வி :** ஞானம் என்பது எது?

**பதில்:** உண்மைப் பொருளை நன்றாக அறிவதுவே ஞானம்.

**கேள்வி :** எது ஆச்சரியம்?

**பதில்:** நாள்தோறும் யமனை நோக்கி உயிர்கள் போய்க் கொண்டு இருக்கின்றன. ஆயினும் மனிதர்கள் சுக அனுபவங்களில் மூழ்கி நாம் நிலையானவர்கள் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்களே! அதுதான் ஆச்சரியம்.

**கேள்வி** எவன் பிரம்மஞானி?

**பதில்** விருப்பு, வெறுப்பு,சுகம், துக்கம்,போனது, வருவது முதலிய எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவன் எவனோ அவன்தான் பிரம்மஞானி.

இவ்வாறு எமதர்மர் வினவிய கேள்விகளுக்கு எல்லாம் தருமர் பொருத்தமான பதில்களைக் கூற அதுவரை மறைவாய் நின்று யமதர்மன், தம் மகன் தர்மருக்குக் காட்சியளிக்கிறார்.

"தர்மா! அற்புதமாகப் பதில் கூறினாய்! உன்தம்பிகளில் ஒருவனை மட்டும் உயிருடன் எழுப்பித் தருகிறேன். யார் வேண்டும் சொல்" என்று கேட்கிறார்.

"இதோ இந்த நகுலன் உயிரோடு எழவேண்டும்" என்று தருமர் கூறுகிறார்.

"தர்மா! பலசாலியும் சிறந்த வீரருமான பீம,அர்ச்சுனர்களில் ஒருவரைக் கேட்காமல் ஏன் நகுலனைக் கேட்கிறாய்?" என்று எமதர்மர் கேட்கிறார்.

"எனக்குக் குந்தி, மாத்திரி என இருவரும் தாயார்கள். குந்தி பெற்ற புத்திரரில்நான் உயிரோடு இருக்கிறேன், மாத்திரி பெற்ற புத்திரர்களில் ஒருவர் உயிர் பெறவேண்டும் என நகுலனை வேண்டுகிறேன்" என்று தர்மர் பதில் கூறுகிறார்

"தர்மா! மெச்சினேன் உன் தர்ம சிந்தனையை. பூதத்திடம் இருந்து உங்களைக் காக்கவே இந்நாடகம் நான் ஆடினேன். உன் தம்பியர் யாவரும் உயிருடனே உள்ளனர் " என்று அனைவருக்கும் உயிர்தந்து எழுப்புகிறார் எமதர்மர்.

யட்சனாய் வந்து எமதர்மர் வினவிய வினாக்களும், தர்மர் தந்த விடைகளும் "யட்சப் பிரச்னம்" என மகாபாரதத்தில் போற்றப்படுகின்றது.

★★★

## திருக்கோயில் பசுவின் மடி



ஆண்டவன் தங்கும் தலங்கள் யாவும் திருத்தலங்கள் எனச் சிறப்பிக்க பெறும்.
**தலங்கள் பசு.** தலங்களின் சிறப்பிற்குக் காரணமான திருக்கோயில்கள் பசுவின் மடி.
**பக்தர்கள் கன்று .**

கன்று முட்ட பசு மடியினின்றும் பால்சுரக்கும். அதுபோல ஆன்மாக்களாகிய நாம் பக்தியுடன் வழிபட, ஆலயங்கள் அருள்விளக்கம் பெறுகின்றன.

வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம்

அபிடேக பாண்டியன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். பின்பு சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத்திரத்தில் வெள்ளியம்பலத்தில் ஆடுகின்ற வேதநாயகனுக்கு மிகவும் சிறப்பான முறையில் பூசை செய்வது வழக்கம். சிவாகம முறைப்படி அபிஷேகங்களைச்



அதற்கு இந்திரன் வருணனை நோக்கி "உனக்கு ஏன் இந்த சந்தேகம்? பிரம்ம விஷ்ணுக்களால் தீர்க்கமுடியாத பிறவி நோய்களையே நீக்கவல்ல சொக்கலிங்கப்பெருமானுக்கு இந்த உடலில் உள்ள பிணியை நீக்கமுடியாதா? இறைவனின் திருவிளையாடலை இப்போதே சென்று நீ சோதித்து அறியலாம்" என்றான்.

உடனே வருணதேவன் "உண்மைதான் இந்திரா! நான் இங்கு வரும்போது காமதேனுவும் அதன் கன்றும்

# திருவிளையாடல் புராணம்

- இரா. அரங்கசாமி

செய்வான். பச்சைக்கற்பூர சுந்தரரே என்று வர்ணிப்பான்.

அபிடேக பாண்டிய மன்னனைப்போல் தேவர்களின் அரசனான இந்திரனும் ஆண்டுதோறும் சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத்திரத்தில் மதுரை வந்து சொக்கலிங்கப் பெருமானைப் பூசிக்கும் வழக்கம் கொண்டவன். அவன் பாண்டியனது பூஜை முடியும் வரையில் காத்திருந்த பிறகுதான், தனது பூஜையை முடித்துச் செல்வான்.

ஒருநாள் இந்திரனது அரசவைக்கு வந்த வருணதேவன், இந்திரனை நோக்கி, "இன்று நீ சிறிது வாட்டம் அடைந்திருப்பதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான். அதற்கு இந்திரன் "மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கலிங்கப் பெருமானைப் பூசை செய்வதற்கு இன்று காலதாமதமாகிவிட்டது. அதுதான் காரணம்" என்றான்.

அதைக் கேட்ட வருணன் "மதுரைச் சொக்கலிங்கம் தான் மற்றைய சிவத்தலங்களில் உள்ள லிங்கங்களைவிடச் சிறந்த லிங்கமோ?" என்று கேட்டான் .அதற்கு இந்திரன் "முன்னாளில் என்னை வாட்டிய பிரம்மஹத்தி தோஷத்தையும், வெள்ளையானையின் சாபத்தையும் அச்சிவலிங்கமூர்த்திதான் போக்கி அருளினார். அது உனக்குத் தெரியாது போலும்" என்றான். அதைக் கேட்ட வருணன் "அப்படியானால் தெய்வீக மருந்துகளால் நீக்கப்படாததாகவும், என்னை வருத்துகின்றதாகவும் உள்ள எனது கொடிய வயிற்று நோயை அந்தச் சிவலிங்கமூர்த்தியினால் போக்கமுடியுமா?" என்று கேட்டான்.

வழியில் எனக்கு எதிரில் வந்ததே ஓர் நல்ல சகுனம்தான். அதனால்தான் இந்த நற்செய்தியை உன்னிடமிருந்து கேட்டு அறிய முடிந்தது" என்றான்.

பிறகு வருணதேவன், கடலை விரைந்து அழைத்து " நீ மதுரை நகரத்திற்குள் சென்று அதனை அழித்து விடு" என்று ஆணையிட்டான். உடனே கடல் பொங்கியது, மரங்கள் முறியும்படி பேரலைகள் பாய்ந்து வந்தன. மலைகளை எல்லாம் பெயர்த்தும் மாடமாளிகைகளைத் தகர்த்தும் கடல்நீரானது பேரலைகளுடன் பொங்கிப் பாய்ந்தது.

கடலின் சீற்றத்தினைக் கண்டு தேவர்களும் அஞ்சினர். மதுரை நகர மக்கள் அனைவரும் "இது சொக்கநாதப்பெருமானின் திருவிளையாடலோ ? நாம் செய்த தீவினையின் பயனோ? தேவர்களை அழிக்க வந்த ஆலகாலமோ?" என்று பலவாறு புலம்பித் தவித்தனர். இவற்றையெல்லாம் கண்டு நடுங்கிய மதுரைப் பாண்டிய மன்னன், அபிஷேக பாண்டியன் சோமசுந்தரக்கடவுளின் திருவடிகளில் விழுந்து "தஞ்சம் தஞ்சம்" என்று கதறினான்.

அப்போது அவன் முன்பு தோன்றிய சோமசுந்தரப் பெருமான் "அஞ்சற்க" என்று அருள்மொழி கூறித் தமது திருச்சடையில் இருந்த நான்கு மேகங்களையும் நோக்கி "இந்த மதுரை மாநகரத்தை அழிக்க வரும் கடல்நீர் முழுதும் வற்றும் வரையிலும் நீங்கள் விரைந்து சென்று பருகுங்கள்" என்றார்.

உடனே அந்த மேகங்கள் நான்கும் சேர்ந்து

கடல்நீரை வாரி உறிஞ்சின. உடனே தேவர்களும் நகரமக்களும், மன்னனும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தார்கள்.

**நான்மாடக் கூடலான படலம்**

கடலின் தலைவனான வருணன் தன் செயல் தவறினமையால் வெட்கமடைந்தான். அளவில்லாத கோபம் கொண்டான். இது சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடல் என்று உணராமல் ஏழு மேகங்களை அழைத்தான். "இடி இடித்து மதுரையில் மழையினைப் பெய்து நீங்கள் மதுரை மாநகர் முழுவதையும் அழிக்கக் கடவீர்" என்றான்.

உடனே கரிய ஏழு மேகங்களும் சென்று இடி இடித்துத் திசைகள் எல்லாம் நடுங்கும்படி மழையைப் பொழிந்தன. கொடிய பெருங்காற்று மதுரை மாநகரைத் தாக்கியது. பாண்டியனும், நகரமக்களும் உலகம் அழியும் நாள் இதுவோ என்று எண்ணி மனம் மயங்கி வாடினார்கள். பாண்டியன், சிவபெருமான் இன்னமும் காத்தருள்வார் என்று எண்ணித் திருக்கோயிலை அடைந்து வணங்கினான்.

உடனே சோமசுந்தரக்கடவுள் நான்கு வேதங்களை நோக்கி, நீங்கள் இம்மதுரையின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து நான்கு மாடங்களாகி ஏழு மேகங்களையும் விலக்குங்கள் என்றார். உடனே அவ் வேதங்கள் நான்கும், நான்கு மாடங்களாகி வளைந்து நான்கு திசைகளிலும் சூழ்ந்து கொண்டன. அம்மேகங்கள் ஒரு குடிசையாகி மாடங்களும், கோபுரங்களும், செய்குன்றுகளுமாகி இவை தூண்போல நின்று தாங்க, மதுரை நகர் முழுவதும் மூடிக்கொண்டன. எனவே அந்நகரின் உள்ளே இருந்த அரசன் முதல் அனைவரும் மகிழ்வுடன் இருந்தனர். வருணன் விட்ட மேகங்களின் மழைநீர் மதுரையில் புகாவண்ணம் இறைவனின் நான்கு மேகங்கள் தடுத்து நின்றன. இதனால் நாணமுற்றான் வருணதேவன். அவன் மேகங்களும் நின்றன.

வெட்கமடைந்த வருணன், அச்சத்துடன் பொற்றாமரைத் தீர்த்தத்தை அடைந்தான். அதனை நெருங்கியவுடன் அவன் வயிற்றுவலி நீங்கிற்று. வருணன் பேரன்புடன் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி சோமசுந்தரக்கடவுளைப் பூசித்தான். சோமசுந்தரக்கடவுள் வருணன் செய்த வழிபாட்டிற்கு மகிழ்ந்து "வருணனே! நீ வேண்டுவது யாது? என்று கேட்டார். உடனே வருணன் "எந்தையே! அடியேன் இந்திரன் கூறிய முறைப்படி பொற்றாமரையில் நீராடி வயிற்றுவலி நீங்கப்பெற்றேன். இப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் பெருமையை உணர்ந்தேன். அடியேன் செய்த பிழையினைப் பொறுத்தருள வேண்டும்" என்று வணங்கினான். பின் இறைவனிடம் வரங்களைப் பெற்றான் . தனது நகரத்தை அடைந்தான்.

(தொடரும்)

நன்றி : இராமலிங்கர் பணிமன்றம்,
சென்னை.

## ★ நட்சத்திரங்கள் முக்தி பெற்றதலம் ★

அஸ்வினி, பரணி, ரோகிணி, கிருத்திகை, மிருக சீரிடம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆகிய 27 நட்சத்திரங்களும் திருவொற்றியூர் ஈசனை வழிபட்டு முக்தி பெற்றுள்ளன. 27 நட்சத்திரங்களும் லிங்கங்களாக மாறித் திருவொற்றியூரில் கோயில் கொண்டு விளங்குகின்றன.

அந்தந்த ராசிக்காரர்கள் தத்தம் பிறந்தநாளில் தத்தம் இராசிலிங்கத்தை வழிபட்டுப் பயன்பெறுகின்றனர்.



## திருவொற்றியூருக்கு வரிவிலக்கு

அயோத்தியை ஆண்ட மாந்தாதா மன்னன், நாட்டில் உள்ள அனைத்து ஊர்களும் வரிகட்ட வேண்டும் என்று ஓலை அனுப்பினான்.

ஓலை கொண்டு வந்தவன் திருவொற்றியூர் எல்லையை மிதிக்கும் போது திருவொற்றியூர் ஈசன் அந்த ஓலையைத் திருத்திவிட்டார்.

வரிவசூல் "திருவொற்றியூர் நீங்கலாக" என்பதே சிவபெருமான் செய்த திருத்தம்.

இதனால் திருவொற்றியூர் ஈசனுக்கு "எழுத்தறியும் பெருமான்" என்பதும் ஒரு திருப்பெயர்.

திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற திருத்தலம் பவானி அருள்மிகு சங்கமேஸ்வரர் திருத்தலம் ஆகும்.




இத்திருத்தலத்தில் தனிச்சந்நிதியாக அமுதலிங்கேசுவரர் ஆலயமும் உள்ளது.

இங்குள்ள சிவலிங்கம் அமுதத்தால் ஆனதால் அமுதலிங்கம் என அழைக்கப்படுகின்றது

தேவர்கள் அமுதம் பெறப் பாற்கடலைக் கடைந்த வரலாறு யாவரும் அறிந்துள்ள ஒன்று.

அமுதம் உண்டானபிறகு திருமால் மோகினி வடிவம் கொண்டு, அசுரர்களை மயக்கித் தேவர்களுக்கு மட்டும் அமிர்தத்தை வழங்கினார்.

எஞ்சிய அமிர்தத்தைப் பொற்குடத்தில் நிரப்பிப் பராசுரர் போன்ற

# மகப்பேறு அளிக்கும் மகிமைமிகு லிங்கம்

முனிபுங்கவர்களுக்கு வழங்க வேண்டும் என எண்ணிக் கருடாழ்வாரிடம் அதைக் கொடுத்து அனுப்பினார்.

கருடனும் அமுதகும்பத்துடன் பறந்து வந்து பவானியும், காவிரியும் கூடும் கூடுதுறையான திருநணா வை அடைந்து சிவபெருமானை வணங்கி அங்கிருந்த பராசர முனிவரிடம் அமுதக் குடத்தை வழங்கினார்.



அசுரர்களுக்குத் தெரியாமல் அமுதக் குடத்தைப் பாதுகாப்பான இடத்தில் மறைத்து வைத்தார் பராசரர். அசுரர்களின் தொல்லையாவும் தீர்ந்தபிறகு பராசுரர் அமுதக் குடந்தை அகழ்ந்து எடுத்த போது அந்த அமுதம் கல்லைப் போல் திரண்டு லிங்க வடிவமாகத் திகழ்ந்தது. அங்கு உண்டாண தீர்த்தமும் அமுதத் தீர்த்தமாகத் திகழ்ந்தது.

பராசர முனிவர் அமுதலிங்கத்தைப் பிரதிட்டை செய்து துதி செய்தபோது இறைவர் எழுந்தருளிக் காட்சி கொடுத்தார்.

"அமுதலிங்கத்தை வழிபடுவோருக்கு வேண்டிய வரம் யாம் அளிப்போம். குழந்தைவரம் வேண்டும் தாய்மார்கள் அமுதலிங்கத்தை வழிபட அவர்களுக்குக் குழந்தைவரம் அருள்வோம்" என்றார் இறைவர்.

இந்த அமுதலிங்கம் ஆவுடையாரின் மேல் எடுக்கவும், திரும்பவும் வைக்கக்கூடியதாயும் உள்ளது. மகப்பேறு இல்லாத தாய்மார்கள் அமுதலிங்கத்தை எடுத்து இடையில் வைத்துக் கொண்டு அச்சந்நிதியை வலம் வந்து வணங்க, மகப்பேறு உண்டாகின்றது.

நீடுபுகழ் மிக்க கூடுதுறையாம் பவானி அருள்மிரு சங்கமேஸ்வரர் ஆலயத்தில் உள்ள அமுதலிங்கேசுவரர் வழிபட்டால் பெறுவதற்குரிய மக்கள் பேறு பெற்று மகிழலாம் என்பது திண்ணம்.



# கந்தர்சஷ்டிக் கவசம் அரங்கேறிய அருள்மிகு சென்னிமலை திருத்தலம்

ஈரோட்டிலிருந்து தாராபுரம் செல்லும் நெடுஞ்சாலையில் முப்பதாவது கி.மீயில் சென்னிமலை அமைந்துள்ளது.

ரெயில் போக்குவரத்து அமைந்த ஊர் இது. ஈரோடு தடத்தில் ஈங்கூர் ரெயில் நிலையத்திலிருந்து எட்டு கி.மீ. தூரத்தில் சென்னிமலை உள்ளது. கோவையிலிருந்து ஈரோடு செல்லும் வழியில் பெருந்துறையில் இருந்து தெற்கே 13-வது கி.மீயில் சென்னிமலை இருக்கிறது.

அருணகிரிநாதர் திருப்புகழில் ஐந்து பாடல்களில் சென்னிமலை வேலவனைப் பாடியிருக்கிறார்.

சென்னிமலைக்கு மேற்கே மூன்று கி.மீ. தூரத்தில் நொய்யல் ஆற்றின் கரையில் கொடுமணல் என்ற கிராமத்தில் பல நூற்றாண்டுக்கு முன் பண்ணையக்காரர் ஒருவர் இருந்தார். மேயச்சென்ற அவரது பசுக்களில் ஒன்று திரும்பி வரவில்லை. தேடிப் போனபோது ஓரிடத்தில் அப்பசு தன் மடியில் இருந்து பாலைச் சொரியவிட்டதைப் பண்ணையார் பார்த்தார். அங்கு மண்ணைத் தோண்டினார்!

அந்த இடத்தில் எல்லோரும் அதிசயக்கதக்க முகப்பொலிவுடன் ஒரு கற்சிலை தென்பட்டது! அச்சிலையை சென்னிமலை மேல் நிறுவினார் என்று திருக்கோயில் வரலாறு உள்ளது.

தற்போதும் சென்னிமலை வேலவனின் முகம், அதி அற்புதப் பொலிவுடன் இருக்கும்; இடுப்புக்குக் கீழ் வேலைப்பாடற்றுக் கரடுமுரடாக இருப்பதைக் காணலாம். இதற்குக் காரணம் மண்ணில் புதைந்து கிடந்தது தான்.

**மாமாங்கத் தீர்த்தம்**

ஒவ்வொரு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இப்பகுதி மழை இல்லாது வறண்டு போகும். பங்குனிமாதம் கோடை காலத்தில் இம்மலைக்குத் தென்புறம் அமைந்துள்ள மாமாங்கத் தீர்த்த சுனை தானாகவே பொங்கி வழிந்து வருவது இன்றும் காணக்கூடிய காட்சியாக உள்ளது.

இங்கு சித்தர் தவமிருந்த ஒரு சிறிய குகை இருக்கிறது. பதினெட்டுச் சித்தர்களுள் ஒருவரான பின்நாக்குச் சித்தர் இக்குகையிலிருந்ததாகக் கல்வெட்டு உள்ளது!

**நவக்கிரகக் கோயில்!**

மூலவர் சென்னிமலை வேலவன், செவ்வாய்க் கோளாக நடுநாயகமாக வீற்றிருக்க மற்ற எட்டுக் கோள்களும் சுற்றிலும் அமைந்து அருள்பாலித்து வருவது வேறு எங்கும் காண முடியாத ஒன்று!

இத்திருக்கோவிலில் மூலவரை வலம் வந்து வணங்கினாலே, நவக்கிரகங்களையும் வழிபட்ட பலனை அடையலாம். செவ்வாய், ராகு, கேது தோசங்கள் நீங்கும்.

**கந்தர் சஷ்டி கவசம்**

ஆன்மீகப் பெருமக்கள் அனுதினமும் பாராயணம் செய்யும் கந்தர் சஷ்டிக் கவசம் என்ற பாடலை எழுதியவர் தேவராய சுவாமிகள். அவர்



இச் சென்னி மலையில் தான் கந்த சஷ்டி கவசத்தை அரங்கேற்றம் செய்தார். சஷ்டி விரதம் இருந்து இத்திருக்கோயிலுக்கு வருபவர்களுக்குச் சந்தான பாக்கியம் உண்டு என்பது ஐதீகம்.

பக்தர்கள் முக்கிய காரியங்களுக்கு (திருமணம், நிலம் வாங்குதல்-விற்பது, கிணறு வெட்டுதல், புதிதாக வியாபாரம் தொடங்குதல்) முடிவு செய்ய, முருகனின் தலையில் பூ வைத்து உத்திரவு கேட்பது வழக்கம். தலையிலிருந்த பூ உதிர்ந்தால், உத்தரவு கிடைத்ததாகக் கொள்வார்கள். நல்ல உத்தரவு கிடைத்தபின் செயல்படுவதும், பூ உத்தரவு கிடைக்காவிட்டால் அக்காரியங்களைத் தள்ளிப் போடுவதும் வழக்கமாக இருக்கிறது.

வைகாசி விசாகத் திருநாளில் இந்த பூ உத்தரவு கேட்டு வரும் பக்தர்கள் மிக அதிகம்! நூற்றுக் கணக்கில் கூடுவார்கள்.

இம்மலை கடல் மட்டத்திலிருந்து 1,749 அடி உயரத்தில் உள்ளது.

மலை மீதுள்ள வேலவனின் சந்நிதியை அடைய 1,320 திருப்படிகள் ஏறவேண்டும். வாகனங்கள் செல்ல தார்ச்சாலையும் உள்ளது. திருக்கோவில், மூன்று பேருந்துகளை இயக்குகிறது.

படி வழியே செல்லும் பக்தர்கள் ஓய்வு எடுத்துச் செல்ல இடை இடையே மண்டபங்களும், குடிநீர் வசதியும் செய்திருக்கிறார்கள். இரவு நேரங்களில் செல்லும் பக்தர்களுக்காக அடிவாரத்தில் இருந்து மலை படிவழிப்பாதையில் மின் விளக்குகள் அமைக்கப்பட்டுள்ளன.

**திருவிழாக்கள்**

வைகாசி விசாகம் இத்திருக்கோயிலில் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. தமிழ்ப் புத்தாண்டுப் பிறப்பு, சித்திரை முழுநிலா, ஆடிக் கிருத்திகை, ஐப்பசி சூரசம்காரம், கார்த்திகை தீபம், தைப்பூசத் தேர் ஆகியவை இங்கு முக்கிய திருவிழாக்கள் ஆகும்.

சென்னிமலைத் தேர் மிகவும் புகழ் பெற்றது. தேர்த் திருவிழாவின் போது பல்லாயிரக்கணக்கான மக்கள் இங்கே கூடுவது கோலாகலமாக இருக்கும்.

**கோயிலில் பூஜை வேளைகள் :**

விளா பூஜை - காலை 7 மணி

காலச் சந்தி பூஜை - 8 மணி

உச்சிக்கால பூஜை - பகல் 12 மணி

சாயரட்சை பூஜை - மாலை 5 மணி

இராக்கால பூஜை - இரவு 7 மணி

அர்த்தசாம பூஜை - இரவு 8 மணி

இத்திருக்கோயில் காலை ஆறு மணி முதல் இரவு எட்டு மணி வரை நடை திறந்திருக்கும்.

சென்னிமலையில் தங்கும் விடுதிகள் நிறைய உள்ளன. பேருந்து வசதியும் இருக்கிறது. வந்து வழிபடுங்கள்.

★★★

## சென்னிமலை அதிசயங்கள்

இத்திருக்கோயில் மூலவரின் தினசரி அபிஷேகம் மற்றும் நைவேத்திய காரியங்களுக்கு இரண்டு அழகிய பொதி காளைகள் மூலம் தினசரி அடிவாரத்திலிருந்து திருமஞ்சன தீர்த்தம் 1320 திருப்படிகள் வழியாக மலைக்கோயிலுக்குக் கொண்டு செல்லும் சிறப்பு நம் நாட்டில் எங்கும் இல்லாத ஒரு தனிச்சிறப்பு ஆகும்.

இந்தியத் திருநாடு மட்டுமன்றி உலகமே ஆர்வத்துடன் கண்டுகளித்த அதிசயத்திலும், அதிசயமாக கடந்த 12.02.1987 ஞாயிறு அன்று இரட்டை மாடுகள் பூட்டிய வண்டி 1320 திருப்படிகள் வழியே மலைக்கோயில் சென்றடைந்த அற்புதம் நிகழ்ந்த திருக்கோயிலாகும் இது.



# திருமந்திர உபதேசம்

திருமந்திரச் செல்வர்
**டி.வி. வெங்கட்ராமன்**, இ.ஆ.ப. (ஓய்வு)

## அடியாரை வணங்குதல்

ஞானத்தை நாடி, குருவிடம் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் சீடன், குருவின் ஞான அமுதத்தைப் பருகி இன்புற்று வரும் அடியார்களைப் பார்க்கின்றான். அவர்களை வெறும் மனிதர்களாகக் கண்டு கொள்ளவில்லை. குருவைப் போலவே, சிவமாம் தன்மை பெற்ற அருளாளர்களாகவே பார்க்கின்றான். உள்ளத்தில் உவகை ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடுகிறது. தன்னையும் தகுதியுடையவனாகக் கருதி அடியார்கள் திருக்கூட்டத்தில் இறைவன் சேர்த்தமையை நினைத்து நெகிழ்கின்றான்.



மணிவாசகப் பெருமான் இறைவனைப் பார்த்துப் பேசுகிறார். "இறைவா! இறைவி உன்னுடைய நடுவில் இருக்கிறாள். நீயும் இறைவியின் நடுவில் குடிகொண்டுள்ளாய். நீங்கள் இருவரும் எனது நடுவில் இருக்கின்றீர்கள் என்பது எனக்கு நன்கு தெரியும். இப்போது உனக்கு ஒரு வேண்டுகோள்!" என்கிறார்.

"அது என்ன வேண்டுகோள்."

"**அடியார்கள், திருவருள்பெற்றவர்கள் நடுவில் நான் இருக்க அருள்புரிய வேண்டும்**" என்கிறார். அதாவது, அடியார்களுடைய உள்ளத்தில் நான் என்றும் இடம் பெற்று இருக்க வேண்டும் என்று பொருள்.

**"உடையாள் உன்றன் நடுவிருக்கும்,**
**உடையாள் நடுவுள் நீ இருத்தி**
**அடியேன் நடுவுள் இருவீரும், இருப்பதானால்**
**அடியேன் உன்**
**அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்**
**பொன்னம்பத்தெம் முடியாமுதலே என்கருத்து**
**முடியும் வண்ணம் முன்னின்றே"**

இந்த அற்புதமான உணர்வுகள் "கோவில் மூத்த திருப்பதிகம்" என்கிற பாடலில் வருகின்றன.

இது தான் என் வாழ்க்கையில் நடந்த மிகப்பெரிய அதிசயம் என்கிறார் மணிவாசகப்பெருமான். எது என்ன அதிசயம்?

"உலக வாழ்க்கைச் சூழலில் அகப்பட்டு, துன்பப்பட்டுக் கொண்டிருந்தவன் நான். இறைவனுடன் ஒன்றிப் போகும் உபாயத்தை அறிந்தேனில்லை. மக்கள் என்னைப் பித்தன் என்று அழைக்கும் அளவுக்குக் குறிக்கோள் இல்லாமல் இருந்தேன். ஆனால் இறைவன் என் அப்பன் என்னை ஆண்டு கொண்டு, அடியார்களுடைய திருக்கூட்டத்தில் சேர்த்தானே! அது அதிசயத்திலும் அதிசயம் அல்லவா!" என்கிறார் மணிவாசகப்பெருமான்.

"பித்தன் என்று எனை
உலகவர் பகர்வதோர்
காரணம்
இது கேளீர்
ஒத்துச் சென்று தன் திருவருள்
கூடிடும்
உபாயமதறியாமே
செத்துப்போய் அருநரகிடை
வீழ்வதற்
கொருப்படுகின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம்
கண்டாமே"
(திருவாசகம் -அதிசயப் பத்து)

அடியார் திருக்கூட்டத்தைப் "**புனிதர் பேரவை**" என்று பெருமைப்பட அழைத்தார் சேக்கிழார் பெருமான். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு திருத்தொண்டத் தொகையின் முதல் அடியை எடுத்துக் கொடுத்தவன் இறைவனேயாகும். அடியார் பெருமையை சுந்தரருக்கு உணர்த்தி சுந்தரர் அவர்களை அடைய வேண்டுமென்றும் அருளினார்கள்.

"பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம் மேல் ஒன்றும் இல்லார்
அருமை ஆம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்

# அருட்பிரகாசருக்கு அமுது படைத்த அன்னை வடிவடைஅம்மன்





அருட்பிரகாச வள்ளலார்தம் 12 வயது முதல் 35 வயது வரை 24 ஆண்டுகள் இடைவிடாமல் திருவொற்றியூர் பெருமானையும், அருள்மிகு வடிவுடை அம்மனையும் வழிபட்டுப் போற்றியுள்ளார்.

ஆதிபுரி ஈசுவரர் மீது "எழுத்தறியும் பெருமான் மாலை" என 31 பாடல்களையும், வடிவுடை அம்மன் மீது "ஸ்ரீ வடிவுடைமாணிக்க மாலை" என 101 பாடல்களையும் மேலும் தியாகராஜர் பவனி பற்றியும், திருவொற்றியூர் முருகனைப் போற்றியும் பாடல்கள் பல பாடியுள்ளார்.

ஒரு நாள் இரவு அன்னை ஸ்ரீ வடிவுடையாளைத் தரிசித்து, கால்நோக நடந்து சென்று வீட்டில் தம் அண்ணியாரை எழுப்ப மனமின்றிப் பசியோடு வீட்டுத் திண்ணையில் படுத்து விட்டார் இராமலிங்க சுவாமிகள்.

அவருடைய அண்ணியார் வடிவில் அன்னை ஸ்ரீ வடிவுடையம்மனே அவரைத் தட்டி எழுப்பி "அம்பிகையைப் பாடிய வாய் பசியோடு வாடலாமா?" எனக்கேட்டு, அமுது படைத்து அருட்பிரகாசரை உறங்க வைத்து மறைந்து போனார்.

காலையில் அவர்தம் உண்மை அண்ணியார் இராமலிங்கரை எழுப்பி "ஏன் என்னை எழுப்பவில்லை? பசியோடு ஏன் உறங்கினாய்?" என வினவிய போதே அருட்பிரகாச வள்ளலார் தம்மை இரவில் அமுதூட்டியது அன்னை வடிவுடையம்மன் எனத் தெரிந்து கொண்டார்.

திருவொற்றியூர் அருள்மிகு வடிவடை அம்மனைத் தினமும் உச்சி காலத்தில் தரிசித்து, அம்மனின் பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கினால் இன்னல்கள் யாவும் தீரும், இன்பங்கள் கோடி சேரும்.

**இருமையும் கடந்து நின்றார்**
**இவரை நீ அடைவாய்"**

(பெரியபுராணம் - தடுத்தாட்கொண்ட புராணம்)

இத்தகைய பெருமையுடைய அடியார்கள் திருக்கூட்டத்தில் சேர்வதே இறைவன் தரும் பரிசு. அடியார்கள் திருக்கூட்டம் வழிவழியாக வருவது "வாழையடி வாழையாக வந்த திருக்கூட்ட மரபினில் யானும் ஒருவன்" என்று உள்ளம் உருகிச் சொன்னார் வள்ளலார். இத்திருக்கூட்ட மக்களுக்கு பணிவிடை செய்வதே ஞானத்தில் நாட்டம் கொண்ட சீடனின் கடமையாகும்.

சிவபெருமானுக்கு எண்ணற்ற அடியார்கள். பலர் அவர்களுக்கு அடியவரானார். மற்றும் பலர், அடியார்க்கு அடியாரானார். அவர்களுக்கே நான் அடியவன் என்று என்னைக் கொடுத்து அவர்களுக்கு நான் அடியவனாகி அவர்களுக்குப் பணிகளைச் செய்வதையே கடமையாகக் கொண்டுள்ளேன். அவர்கள் என்மேல் கருணை வைத்தார்கள். அருள்பாலித்தார்கள். இறைவனுடைய திருவடிகளில் என்னைச் சேர்த்தார்கள். அடியார்கள் செய்ததை இறைவனும் ஏற்றுக் கொண்டான். என்னை அவனது அடிமையாக்கிக் கொண்டேன்" இவ்வாறு திருமூலர் தனது அனுபவத்தை உலகுக்கு எடுத்துச் சொல்வதைப் பார்க்க நமது உள்ளத்திலும் பேரானந்தம் தலைப்படுகிறது.

**"அடியார் அடியார் அடியார் அடிமைக்கு**
**அடியனாய் நல்கிட்டு அடிமையும் பூண்டேன்**
**அடியார் அருளால் அவனடி கூட்ட**
**அடியான் இவன் என்று கொண்டானே"**

(திருமந்திரம் 2624)

சேக்கிழார் பெருமான் சிவனடியார்கள் வரலாற்றைப் பெருங்காப்பியமாக அருளிச்செய்தார். அப்போது சோழ நாட்டை ஆண்டு வந்த அநபாய சோழ மன்னன் அதைப் படித்து பயனடைய

வேண்டுமென்று விரும்பினார். மன்னனுடைய உள்ளத்திலே அறியாமை இருள் மூடிக்கிடந்தது. எதுமெய், எதுபொய் என்று தெளிந்து கொள்ளாமல் வாழ்க்கை நடத்தி வந்தான். அந்த அறியாமை இருளைப் போக்க முற்படுகிறார் சேக்கிழார் பெருமான். அகஇருளை நீக்கச் சிவனடியார்கள் வாழ்க்கை உண்மைகள் உதவும் என்னும் உறுதிப்பாடு திருத்தொண்டர் புராணத்தில் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது.

அடியார்கள் பேச ஒண்ணாப் பெருமையுடையவர்கள். ஐம்பெரும் பூதங்கள் கலங்கினும், சிவபெருமானை மறவாதவர்கள். அன்பின் வெளிப்பாடாகிய திருத்தொண்டின் நெறி நின்றவர்கள். கோதிலா குணப் பெருங்குன்றனையவர்கள். கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார். ஓடும் செம்பொனும் ஒக்க நோக்குவார். இடையறாது இறைவனை நினைத்து வழிபடும் பாங்கினர். குறைவிலா நிறைவுடையவர்கள்.

அடியார்களுக்குச் செய்யும் தொண்டெல்லாம், இறைவனுக்குச் செய்யும் தொண்டேயாகும்.

அந்தணர்க்கு, அவர்கள் குடியிருக்கும் வீதிகளைத் தானமாக அளிக்கலாம். அவர்களுக்கு மாளிகைகள் பல கட்டித் தரலாம். இவற்றால் பலன் உண்டு. அதே நேரத்தில் ஞானி, ஒருவன் இல்லத்தை அடையும் போது, அவனை வழிபட்டு உணவுதரும் போது அவன் உண்பதால் பெறும் பயன், எல்லாவற்றிற்கும் மேலானது என்கிறார் திருமூலர்.

**"அகரம் ஆயிரம் அந்தணர்க்கு ஈயிலென்**
**சிகர மாயிரம் செய்தே முடிக்கிலென்**
**பகரும் ஞானி பகலூண் பலத்துக்கு**
**நிகரிலை யென்பது நிச்சயந்தானே"**

(திருமந்திரம் - 1860)

சிவப்பரம் பொருளை உணரும் வகைகளிலெல்லாம் உணர்ந்து, அந்த உணர்வின்கண் வரும் அனுபவத்தாலும் அறிவாற்றலாலும் பிறருடைய மயக்கத்தைப் போக்கி, நன்மைபயக்கும் ஞானி ஒருவன் ஒரு நாட்டில் இருந்தால், அந்த நாட்டில் அமைதி நிலவும். மழை பொய்யாது பெய்யும். உட்பகையோ, வெளிப்பகையோ இராது. வறுமை இராது. இது திருமூலர் பெருமான் சொன்ன உண்மை.



## விஷ்ணு பெருமானுக்கு உகந்த மலர்கள்

*1. துளசி 2. மாதவி 3. குருந்து*
*4. வாகை 5. மதயாணி 6. கருங்கால் கொன்றை 7. முருக்கு 8. அலரி*
*9. செம்பரத்தை 10. செந்திலகம்*

## வைகாசியில் நாயன்மார் திருநட்சத்திரம்


நம்மாழ்வார்

கழற் சிங்கர் - பரணி
நமிநந்தியடிகள் - பூசம்
சோமாசிமாறர் - ஆயிலியம்
திருஞானசம்பந்தர் - மூலம்
திருநீலநக்கர் - மூலம்
திருநீலகண்ட யாழ்ப்பாணர் - மூலம்.

"சீர்த்தொண்டர் சீர்பரவுவார்
சேக்கிழார் திருநட்சத்திரம்
வைகாசி - பூசம்
ஆழ்வார் திருநட்சத்திரம்
ஸ்ரீ நம்மாழ்வார் - வைகாசி விசாகம்

**"திகைக்குரியான் ஒரு தேவனை நாடும்**
**வகைக்குரியான் ஒரு வாதியிருப்பின்**
**பகைக்குரியாரில்லை பார்மழைபெய்யும்**
**அகக்குறை கேடில்லை அவ்வுலகுக்கே"**

(திருமந்திரம் 1868)

அடியார்களின் ஆற்றலும், பக்குவமும் முற்றுணர்வும் வியக்கத்தக்கவை. அவர்கள் பிறரைப் போலவே இவ்வுலகத்தில் வாழ்வார்கள். ஆனால் உலக மயக்கத்துட்படாது, எண்ணங்களிலும் செயல்பாட்டிலும் தெளிவாக இருப்பார்கள். உடம்பு நீங்கிய பின்னரும், பிற உயிர்களைப் போல் அல்லாது சிவலோகப்பதவிகள் பெற்று, புவனங்களை ஆள்வார்கள். சிவமாம் தன்மையைப் பெற்ற காரணத்தால் பரந்த அறிவினராய், தமது அறிவு சிவனறிவில் மறைய சிவமேயாய் இருப்பார்கள். திருமந்திர வாக்கினைப் பார்ப்போம்.

**"இயந்திர உலகினில் ஈசன் அடியார்**
**மயங்கா வழிச் செல்வர் வானுலகாள்வர்**
**புயங்களும் எண்டிசை போது பாதாளம்**
**மயங்காப் பகிரண்டம் மாமுடிதானே"**

(திருமந்திரம் 1873)

இளமையிலேயே அடியார் பக்தி தோன்றுதல் சாலச் சிறந்தது என்பார் திருமூலர். அவர்களை வேடத்தால் அறிந்து கொள்ள வேண்டும். அவர்களுக்குப் பணி செய்வதே இறைவனுக்கு அடிமையாவதாகும். அவர்களுடைய திருவடிகளிலிருந்து தூயநீரைப் பெற்று, தலையில் தெளித்துக் கொள்வது பெரும் தவமாகும் என்கிறார் திருமூலர் பெருமான்.

**"அறியாப் பருவத்து அரனடியாரைக்**
**குறியாய் அறிந்து இன்பம் கொண்டதடிமை**
**குறியார் சடைமுடி கூட்டி நடப்பார்**
**மறியார் புனல்மூழ்க மாதவமாமே"**

(திருமந்திரம் 1879)

★★★

# "கற்றாவின் மனம் போல கசிந்துருக வேண்டுவனே!"



**பு.ஏ. இராமையா**, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்,
தமிழ்வளர்ச்சி-பண்பாடு மற்றும்
அறநிலையத்துறை.

எண்பத்தொரு வயது வரை வாழ்ந்து சைவ நீதியை இந்த உலகிலே நிலைநாட்டி, காடு,மேடு என்று பாராமல், கடும் பனியைக் கருதாமல், மழை என்று நினையாமல், நோய் பிணியைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் வாழ்ந்து மறைந்த அப்பர் அடிகள் தமக்குப் பிறவி வேண்டாம் என்று சொல்கின்றார்.

அப்படியே துரதிஷ்டவசமாக தாம் ஒரு பிறவியில் பிறந்தாலும், சிவபெருமானுடைய திருவடியை அனுதினமும் பற்றிக் கொண்டிருக்கக் கூடிய அந்த அரும் பெரும் பிறவி தான் வேண்டுமென்று வேண்டுகின்றார். தாம் புழுவாகப் பிறந்தாலும், சிவபுண்ணியனின் திருவடியை வழுவாது பிடித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று திருப்பாதிரிப்புலியூரில் இறைவன் முன்பு தாழ்மையாகப் பாடுகின்றார்.

**"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா**
**உன் அடி என் மனத்தே**
**வழுவாது இருக்க வரம் தர வேண்டும்**
**இவ் வையகத்தே**
**தொழுவார்க்கு இரங்கி இருந்து**
**அருள்செய் பாதிரிப்புலியூர்ச்**
**செழுநீர்ப் புனல் கங்கை**
**செஞ்சடைமேல் வைத்த தீ**
**வண்ணனே"**



அதுபோல் 8-ஆம் திருமுறையை இந்த உலகத்திற்கு அருளிய மாணிக்க வாசகப் பெருமான் திருநாவுக்கரசர் போலவே உலக வாழ்க்கையை வெறுத்து ஒதுக்கிப் பற்றற்றான் பற்றினைப் பற்ற நினைக்கின்றார்.

ஜி.யூ.போப் அவர்கள் ஐரோப்பிய தேசத்திலிருந்து இந்திய நாட்டிற்கு வந்து அதிலும் குறிப்பாக தமிழ்நாட்டில் கிராமம் கிராமமாக அலைந்து கிறித்துவ மார்க்கத்தைப் பரப்ப முனைகின்றார். அந்தக் காலகட்டங்களில் தமிழ் இலக்கியத்தினுடைய தன்மையையும், வளமையையும், வண்மையையும், செழுமையையும், எண்ணிறந்த இலக்கியங்களையும், இலக்கணங்களையும் அவரால் சுவைத்து உணர முடிந்தது.

திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் படித்த போப் அவர்கள், அதை படித்து அறிந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அதற்குக் காரணம் என்னவென்றால் அந்த இலக்கியங்கள் மீது அவர் கொண்டிருந்த அளப்பரிய பற்றுதான். அப்படி திருவாசகத்தை படித்து உணருகின்றபோது அதில் இருக்கக் கூடிய இலக்கியக் கருத்துக்கள், ஆன்மிகக் கருத்துக்கள் போன்றவை எல்லாம் போப் அவர்களை மெய் குளிர வைத்தன.

குதிரை வாங்கச் சொல்லிக் கோடிப் பொன் கொடுத்து அனுப்புகின்றான் பாண்டிய மன்னன். அமைச்சராக இருந்து அரும்பணியாற்றிய மாணிக்கவாசகப் பெருமானுக்கு அண்ட சராசரங்களை எல்லாம் ஆட்டிப் படைக்கக் கூடிய ஆதி சிவன் முன் அளப்பரிய நாட்டம் ஏற்படுகிறது.

பொன்னையும், பொருளையும் அப்படியே ஆண்டவனுக்குக் காணிக்கையாக்கி, மிகப்பெரிய ஆலயம் ஒன்றை ஆவுடையார் கோயிலில் நிறுவுகின்றார். குதிரை வாங்கச் சென்ற மாணிக்கவாசகப் பெருமான் வராதது கண்டு தூதுவர்களை விட்டுத் தேட வைக்கின்றான் பாண்டிய மன்னன். மாணிக்க வாசகரும் இறைவனுடைய அருளால் குதிரைகள் பெற்று அந்தக் குதிரைகளை எல்லாம் கோயில் லாயத்திலே கட்டி வைக்கின்றபொழுது அவைகள் அனைத்தும் நரிகளாக மாறுகின்றது. இப்படிப்பட்ட திருவிளையாடல்களால் மாணிக்க வாசகருடைய மாபெரும் இறை சக்தியைக் கண்டு வணங்கி அவரை இறைஅடியாராக ஏற்றுக் கொண்டார் பாண்டிய மன்னன். காலமெல்லாம் பல திருத்தலங்கள் சுற்றித் திரிந்து திருவாசகம் என்று சொல்லக்கூடிய அற்புத நூலையும், திருக்கோவையாரையும் பாடி அருளினார். இறைவன் முன்னிலையில் அமர்ந்து கொண்டு எனக்கு உற்றார் யாரும் வேண்டாம், ஊர்

வேண்டாம், பேர் வேண்டாம், கற்றாருடைய துணையும் வேண்டாம். இனி தினம் கற்க வேண்டுமென்று நான் நினைத்தால் கூட அது எனக்கு வேண்டாம். குற்றாலத்திலே குடி கொண்டு இருக்கக்கூடிய கூத்தரசனுடைய திருவடியைப் பற்றக் கூடிய வாய்ப்பு கிடைக்குமானால் தான் எனக்கு மறுபிறவி வேண்டும்; செல்வமும், பொன்னும், பொருளும், புகழும் எனக்கு வேண்டாம்; சிவபெருமானுடைய திருநாமத்தை அனுதினமும் துதிக்கக் கூடிய அந்தப் பாக்கியம் ஒன்றே போதும் என்று உருகுகின்றார்.

**"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"**

இந்த பாட்டினுடைய அருமைகளையும் பெருமைகளையும் தெரிந்து இராமலிங்க பெருமான்

**"வாட்டமில்லா மாணிக்க வாசக! நின் வாசகத்தைக்**
**கேட்டபொழுது அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்**
**வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான**
**நாட்டமுறும் என்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே"**



என்று உருக்கமாகப் பாடினார். இப்படி அப்பரும், மாணிக்க வாசகரும் இறைவன் முன்னிலே அமர்ந்து அவர்கள் வேண்டிக் கொண்ட விதத்தினைப் பார்க்கின்றபோது மனித சமுதாயம் மட்டும் ஏன் உலக ஆசையில் சிக்குண்டு அல்லல்படுகின்றது - மனம் சஞ்சலம் அடைகின்றது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மனம் அல்லல்படுகின்றபோது சிந்தனைகள் ஒருமுகமாவது இல்லை, சிந்தனைகள் ஒருமுகமாகாத போது உடலும் உயிரும் வேதனை அடைகின்றது. உயிர் வேதனை அடைகின்றபோது மனித அமைதி கெடுகின்றது. மனித அமைதி கெடுகின்ற போது சமுதாயம் கீழ்ப்படுத்தப்படுகின்றது. சமுதாயம் கீழ்ப்படுத்தப்படுகின்ற போது ஒரு நாட்டினுடைய வளர்ச்சி கேள்விக்குறியாகின்றது.



ஆக அனைத்திற்கும் காரணம் மனம் தான். அந்த மனதை ஒருமுகப்படுத்தப்படுவதற்குத்தான் இறைவன் முன்னில் எந்தப் பற்றும் வேண்டாம். ஆண்டவன் முன்னில் நான் சார்ந்து வாழ்வதையே விரும்புகின்றேன் என்று இறைஞ்சுகின்றார். அப்படிப்பட்ட வேண்டுதல்களை ஒவ்வொரு மனிதனும் ஒருநிலைப்படுத்தினால் அவர்களுடைய சிந்தனை சீர் மிகுந்து வாழ்க்கை சிறக்கும் என்பது திண்ணம்.

அதைத்தான் அருளாளர்கள் எல்லாம் நமக்கு சொல்லி இருக்கிறார்கள். அதைக் கடைப்பிடித்தால் மனித சமுதாயம் உயரும் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை.

★★★

# தமிழ்நாட்டுச் சித்தர் பரம்பரை

## பாம்பாட்டிச் சித்தர்



முனைவர் **இரா . செல்வகணபதி**

**பா**ம்பாட்டிச் சித்தர்

"நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே "

என்று பாம்பை முன்னிலைப்படுத்தி , ஆடுமாறு வேண்டிப்பாடிய ஒரு சித்தர் பெருமகனாரைத் தமிழ்நாட்டு மக்கள் "பாம்பாட்டிச் சித்தர் " என அழைத்தனர். பதினெண் சித்தர்கள் என்ற தொகுப்பில் இவர் பெயர் இடம் பெற்றுள்ளது. இவர் கார்த்திகைத் திங்கள் மிருக சீரிட விண்மீனில் பிறந்தார். இவர் பாண்டி நாட்டில் பிறந்து சட்டை முனியிடம் தீட்சைபெற்றனர். இவர் பிறந்த தலம் திருக்கோகரணம் என்பர். கொங்கு நாட்டிலுள்ள மருத மலையில் நெடுநாள்வாழ்ந்திருந்தார். அங்கே இவருக்கு நினைவிடங்கள் இன்றும் உள்ளன .சங்கரன் கோயிலில் அன்னை கோமதியை இவரே பிரதிஷ்டை செய்தார். சங்கரன் கோயிலில் க்ன்னி மூலையில் புளியங்குடி சாலையிலுள்ள புன்னை வனத்தில் இவர் நிருவிகர்ப்ப சமாதி கூடினார். இவர் இம்மண்ணுலகில் 123 ஆண்டு 4 நாள்கள் வாழ்ந்திருந்தார். பாம்பாட்டிச் சித்தர் இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்தவர் .

**பாடல் அமைப்பு**

பாம்பாட்டிச் சித்தரின் கொள்கைகளை அறிந்து கொள்ள அவர் பெயரில் வழங்கும் 129 தனிப்பாடல்களே துணையாக உள்ளன. ஞான சூத்திரம், பெரியஞானக் கோவை எனச் சிலர் அவர் பாடல்களை வகைமைப்படுத்தி உள்ளனர்.அவர் பாடல்களைக் குருவணக்கம், சித்தர் வல்லபம், பொருளாசை விலக்கம், பெண்ணாசை விலக்கம், உடலின் குணம், அகப்பற்று நீக்கல் என்றெல்லாம் உள் தலைப்பிட்டுச் சிலர் பதிப்பித்துள்ளனர்.

இப் பகுப்பு மேலெழுந்தவாரியாகச் செய்யப்பட்டுள்ளது. இவர் பாடல்களில் அறிவுநிலை, உடல்நிலை,ஒருமைப்பாடு, சாதி பேதங்களைக் கண்டித்தல், செல்வம் நிலையாமை, இழிந்த காமத்தை வெறுத்தல், பேரின்ப வழிகாட்டல் என்பன சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**கொள்கைகள்**

பாம்பாட்டிச் சித்தரின் கொள்கைகளில் குறிக்கத்தக்கன சில உள்ளன. சிவனே முழுமுதற்கடவுள். அவன் கூத்தனாகக் காட்சி தருகிறான். இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்தவன். அவனை அடையும் ஒரே மார்க்கம் அன்பு மார்க்கமே, அன்பு இல்லாதாருக்கு வீடு பேறு இல்லை.

கோயில்வழிபாடு, திருத்தலயாத்திரை முதலியவற்றால் இறைவனை அடைய முடியும் என்பதில் அவருக்கு உடன்பாடு இல்லை. வேதம்,சாத்திரம், தந்திரம், புராணம், ஆகமம் என்பன வீணானவை. உலகப் பற்றும், ஆசையும் ஒழிக்கப்படவேண்டுவன,

இவர்பாடல்கள் எளிய நடைகொண்டவை. சொல்நயம் மிக்கவை. எளிய உவமைகளால் அமைந்தவை. ஆழ்ந்த தத்துவச்செறிவு கொண்டவை. ஒவ்வொருவர் உடலின் உள்ளேயும் பாம்பு வடிவாக மண்டலித்துள்ள குண்டலினி என்னும் சக்தியை எழுப்பி, அதன் மூலம் ஆன்ம தரிசனத்தைக் காண வைப்பதே இவர் நோக்கம். ஆடு பாம்பே என இவர் எழுப்புவது குண்டலினி என்னும் மகாசக்தியையேயாகும்.

**சிவ□ம் - குருவும்**

இறைவன் எல்லாப் பொருள்களிலும் இணைந்தே உடனாக நிற்கிறான் என்பதைப் பாம்பாட்டிச் சித்தர்

**"பொன்னில் ஒளிபோல எங்கும் பூரணமதாய்
பூவின்மணம் போலத் தாங்கும் பொற்புடையதாய்
மன்னும்பல உயிர்களில் மன்னிப்பொருந்தும்
வள்ளல் அடி வணங்கிநன்று ஆடுபாம்பே"** எனப் பாடுகின்றார்.

குருவின் துணைபெற்றே சிவன் தாள்மலரை அடைய முடியும் என்பது இவரது திடமான கொள்கை.

**"உள்ளங்கையில் கனிபோல உள்ளபொருளை**
**உண்மையுடன் காட்டவல்ல உண்மை குரு "**
**என்றும்,**
**"போதப் பொருள் இன்னதென்று போதனை செய்யும்**
**பூரண சற்குருதாள் கண்டு ஆடுபாம்பே",**

என்றும், குரு வழி பெறலாகும் ஞானம் இவரால் விளக்கப்படுகிறது.

**சித்தாடல் பதிவுகள்**

சித்தர்கள், சிவனருளும், குருவருளும் கைவரப்பெற்று சித்தாடல் நிகழ்த்திய அற்புதமானவர்கள்.

"எட்டு நாகம் தம்மைக் கையில் எடுத்தே ஆட்டுவோம் "
"தூணைச் சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம் "
"ஏழுமலைகளைப் பந்தாய் எடுத்து எறிகுவோம் "
"செப்பரிய மூன்றுலகும் செம்பொன்ஆக்குவோம்
செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்து விடுவோம், "

சித்தர்கள் நிகழ்த்தவல்ல சித்துக்கள் சிலவற்றை இவர் பின் வருமாறு பாடியுள்ளார்.

**"நடுவாக ஆதிசேடன் தன்னை நட்டும்**
**நான்கு திக்கும் மந்திரித்த நீறுதூவும்**
**கடுவிடம் கக்கலே அக்கட் செவிகளைக்**
**கையில் எடுத்து ஆடுங்கள் சித்தனாரே"**

மனமே உலகியல் பொருள்கள் கூடவருவதில்லை. சிவன்பதம் நாடும் பழக்கத்தை மேற்கொள் என்று அறிவுறுத்துகின்றார்.

**"நாடுநகர் வீடுமாடு நற்பொருள் எல்லாம்**
**ஒருவன்வரும்போது நாடிவருமோ?"**

எனவினாத் தொகுத்து

**"கூடுபோன பின்புஅவற்றால் கொள்பயன்**
**என்னோ? கூத்தன்பதம் குறித்து நின்று ஆடுபாம்பே"**

எனச் சிவன் திருவடிகளில் நாட்டத்தை விதைக்கிறார். பெண்ணாசை இறை நினைவை அழிக்கும் என்பதை,

**"நெக்கு நெக்கு உருகிப் பெண்ணை நெஞ்சில் நினைப்பார்**
**நிமலனை நினையார் என்று ஆடுபாம்பே"**

என்று அடையாளப்படுத்துகிறார்.

**சீர்திருத்த வாதி :**

உடல் என்பது யாது? மரணத்துக்குப்பின் இதனால் ஒரு சிறுபயனும் இல்லை என்கிறார் சித்தர்.

**"ஊத்தைக்குழிதனிலே மண்ணை எடுத்தே**
**உதிரப் புனலிலே உண்டை சேர்த்தே**
**வாய்த்த குயவனார் அவர் பண்ணு பாண்டம்**
**வறையோட்டுக்கும் ஆகாதென்று ஆடுபாம்பே,"**

புளியம்பழமும், அதன் ஓடும் போலச் சுற்றத் தொடர்புகளில் இருந்து நீங்கவேண்டும். அன்பற்றவனுக்கு வீடு பேறு என்பது என்றும் இல்லை, கள்ளப் புலன்களைக் கட்டறுத்தால் கால காலனைக் காணலாம். மூடர்களைவிட்டு அஞ்ஞானம் என்றும் நீங்காது. நிறைவாக

**"சமயபேதம் பலவான சாதி பேதங்கள்**
**சகத்தோர்க்கே அல்லாது சற்சாதுக்களுக்கோ?**
**சமயத்தில் ஏறினபேர் சித்தம் மாறுமோ**
**சித்தர் சித்தாந்தம் தேர்ந்து ஆடுபாம்பே"**

என்கிறார்.

பாம்பாட்டிச்சித்தர் சித்தர் சித்தாந்தம் தேடிக்காணப்பணிக்கிறார்.

ஒரு சீர்திருத்தவாதியாகநின்று,

**"சாதிப் பிரிவிலே தீயை மூட்டுவோம்**
**சந்தை வெளியிலே கோலை நாட்டுவோம்"**

எனச் சாதியத்தைச் சாடி மனிதகுல ஒருமைக்கு அழைப்பு விடுக்கிறார் பாம்பாட்டிச் சித்தர்.

★★★

## பாம்பிடமும் பரிவுகாட்டிய பக்தர்



ஒருநாள் தம் தம்பி கோவிந்தரை இராமானுஜர் காணச் சென்றபோது தம்பி கோவிந்தர் ஒரு நாகப் பாம்பின் வாயில் தம் விரலை வைத்துக் கொண்டிருந்தார்.

விஷப்பாம்பு என்று அறிந்தும், பாம்பிற்கு இரங்கி, அதன் துயரம் தீர்த்து, அதனைப் பத்திரமாக அனுப்பிவைத்த கோவிந்தரின் கருணை இராமானுஜரையே வியக்க வைத்தது.

"கோவிந்தா! நீயே உத்தமன். சிறந்த திருமால் அடியான். வைணவ உலகம் "எம்பார்" எனஉம்மைப் போற்றி மகிழட்டும்" எனப் பாம்பிடமும் பரிவுகாட்டிய கோவிந்தருக்கு "எம்பார்" எனப் பட்டம் கட்டி மகிழ்ந்தார் எம்பெருமான் ஸ்ரீ இராமானுஜர்.

# மாயாதனு விளக்கு

- கி. சிவகுமார்.

ன்று காலை அலுவலகத்தில் நுழைந்து வருகைப் பதிவேட்டில் கையெழுத்திட்ட பின் என் அறைக்குச் சென்று அமர்ந்தேன். என்னுடன் பணிபுரியும் நண்பர் வாசுதேவன் எட்டிப் பார்த்தார். நேரத்தோடு தாம் வந்து விட்டதை எனக்கு அறிவிக்கும் சமிக்ஞை அது. நான் சைகையால் உள்ளே வரச் சொன்னேன்.

மலர்ந்த முகத்தோடு வந்த என் நண்பர் வாசுதேவனை அமரச் சொல்லிவிட்டு,

"இரவு என்ன செய்தீர்?" என்றேன்.

"நன்கு உறங்கினேன் " என்று பதிலிறுத்தார் அவர். நான் மீண்டும்,

"நீர் என்ன செய்தீர்?" என்று கேட்டேன்.

"நான் தான் சொன்னேனே" "உறங்கினேன்" என்று. காதில் விழவில்லையா?" என்று அழுத்தமாகக் கூறினார்.

நான் விடவில்லை. "நீர் சொல்வது தெளிவாகக் காதில் விழுகின்றது". ஆனால் நீர் தான் எம் கேள்வியைப் புரிந்து கொள்ளவில்லை. நீர் என்ன செய்தீர் என்று தான் கேட்டேன்" என, "நீர்" என்பதை அழுத்தித் திருத்தமாகக் கேட்டேன்.

விழித்தார் அவர்; எனக்கு ஏதோ ஆகிவிட்டதோ என்று கூட சற்று அஞ்சினார். பதில் கூறாது என்னையே பார்த்துக் கொண்டிருந்த அவரிடம் கேள்வியைச் சற்று விரித்தேன்.

"வாசுதேவன் இரவு உறங்கியது உம் உடல். ஆனால் அதன் எஜமானன் ஆகிய நீர் என்ன செய்தீர்?" என்று கேட்டவுடன் என் கேள்வியில் பொருள் இருப்பதை அவர் உணர்ந்தது போல் தெரிந்தது.

"நீங்கள் சொல்வதிலே ஏதோ 'நுட்பம்' இருப்பது போல தெரிகிறது. விளக்கமாகக் கூறுங்கள்" என்றார் வாசுதேவன்.

தொடர்ந்தேன் நான். 'ஆன்மாவிற்கு ஏது உறக்கம்? ஏது இரவு? ஏது பகல்?' நாள் முழுவதும் இயங்கிக் களைத்த உடல் ஆன்மாவிற்கு 'டாடா' காட்டிவிட்டு ஓய்வெடுக்கச் செல்கிறது. இப்படி உடல் ஓய்வெடுக்கும் போது ஆன்மா எங்கே செல்கிறது? தான் எங்கே இருந்தோம் என்பது கூட அதற்குத் தெரிவதில்லை. அல்லவா?' என்றேன். 'ஆம்! ஆம்!' என்றபடி தலையை ஆட்டினார் வாசுதேவன்.

உடல் இப்படி ஓய்வெடுக்கும் போது அதன் சில கருவிகள் ஓய்கின்றன; அதாவது கண்ணிருந்தும் பார்வைஇல்லை; காதிருந்தும் கேட்பது இல்லை.

சுருங்கச் சொன்னால் ஆன்மாவிற்கு உடலோடு கூடிய தொடர்பு தற்காலிகமாக அறுபடுகிறது. இதன் விளைவு ஆன்மா (உயிர்) இருளில் மூழ்குகின்றது. 'இருள்' என்பதைச் சித்தாந்த நூலார் 'அறியாமை' என்பர்.

"இந்த உறக்கம் உடல் ஓய்வெடுக்கத் தான் என்றாலும், இறைவன் இந்த உறக்கத்தின் மூலம் நமக்கு உணர்த்துகின்ற ஓர் அரிய செய்தியும் உண்டு' என்று கூறி நிறுத்தினேன்.

வாசுதேவன் ஆர்வத்தோடு, 'என்ன அது, கூறுங்கள்' என்றார். தொடர்ந்தேன் நான், 'மனிதனே! நீ உறங்கச் செல்கின்ற போது உனக்கும் உன் உடலுக்கும் இருக்கும் தொடர்பு தற்காலிகமாக அறுபடுகிறது. அப்போது நீ இருளில் மூழ்குகின்றாய். நன்றாகச் சிந்தித்துப்பார், உடல் தற்காலிகமாக தொடர்பு அறுபடும் போது நீ இருளுக்குப்போனால், உடல் இல்லாத போது நீ எங்கு இருந்தாய் என்று. அதாவது உடல் பெற்று இந்த உலகிற்கு நீ வருமுன் எங்கு இருந்தாய் என்று. சிந்தித்தால் தெரியும், நீ பெரும் இருளில் இருந்தாய் என்று'.

"இருளில் இருந்த உனக்கு இந்த உடல் கொடுத்து ஒளிநிலைக்கு அழைத்துவந்தேன் நான் என்று தினம் தினம் நமக்கு இந்த உறக்கத்தின் மூலம் இறைவன் ஞாபகப்படுத்துகின்றான்".

வாசுதேவன் கண்களில் மிரட்சி தெரிந்தது. அவர் 'நீர் சொல்வதை கேட்டால் வியப்பாக இருக்கிறது. பிறப்பதற்கு முன் நாமெல்லாம் இருளிலா கிடந்தோம்' என்று வாய் பிளந்தார். தொடர்ந்து விளக்கினேன்.

'இரவில் இருளில் வாடிய ஒருவனுக்கு மண்

விளக்கு தரப்பட்டது. எண்ணெய் ஊற்றித் திரி இட்டு, ஒளி ஏற்றப்பெறுகின்றது. இருளில் மயங்கிக் கிடந்த அவனுக்கு விளக்கின் ஒளி சற்றுத் துணை செய்கின்றது. அது பொருள்களைக் காட்டி நின்றது. அறியாமையில் மூழ்கியவனுக்கு சற்று அறிவு விளக்கம் தருகின்றது. அது சரி! அந்த மண் விளக்கின் துணை அவனுக்கு எதுவரை தேவைப்படும்?' என்று வாசுதேவனைக் கேட்டேன்.

உடனே அவர்,

'காலையில் சூரியன் உதிக்கும் வரை' என்றார் பளிச் சென்று.

'அதற்குள் விளக்கு வீழ்ந்து உடைந்துவிட்டால்? என்றேன்.

'மீண்டும் இருளில் சிக்க வேண்டியது தான்' என்றார் உடனே.

'மிகச் சரியாகச் சொன்னீர்! என்று கூறிச் சிரித்து விட்டுத் தொடர்ந்தேன்.

'அறியாமை எனும் ஆணவ இருளில் மூழ்கியிருந்த நமக்குத் துணை செய்யும் அகல்விளக்கு போல இந்த உடலை இறைவன் தந்தார். இருளில் இருந்த நமக்கு இந்த உடல் கொண்டு சில அனுபவங்கள் நிகழ்கின்றன. அந்த அனுபவங்கள் அறிவு விளக்கத்தைச் செய்கின்றன. அது முதிர்ந்து, சிவசூரியன் உதிக்கும் வரை இந்த உடலாகிய விளக்கு வேண்டப்படுகின்றது. அதைக் காப்பதும் நம் கடமை ஆகின்றது. ஆனால் சிவசூரியன் உதிப்பதற்கு முன் உடல் மண்ணில் வீழ்ந்தால், சூரியன் உதிக்கும் முன் விளக்கை இழந்தவன் இருளில் சிக்குவது போல நாமும் இருளில் மூழ்குவோம். இதனால் அல்லவா மெய்கண்டார் இந்த உடலை 'மாயாதனு விளக்கு' என்று கூறுவார். என, என் விளக்கத்தை வாசுதேவனுக்குக் கூறினேன்.

உடனே வாசுதேவன் அவசரமாக 'மாயாதனு விளக்கு!' என்பதைச் சற்று விளக்குங்கள் என்றார்.

'மண்ணிலிருந்து செய்விக்கப் பெற்ற அகல் போல, மாயையிலிருந்து செய்யப் பெற்ற உடல்' என்று இதற்குப் பொருள். மண்ணில் தான் விளக்கு செய்யப்பெற்றது. முதற்காரணம் என்பர். ஆனால் அது தானாக வந்துவிடுமா? மண் சடம் ஆயிற்றே. ஆகையால் மண்ணில் விளக்கு செய்ய கருத்தா ஒருவன் வேண்டும். அவனே நிமித்த காரணன். அவன் தன் நிமித்தமா, சுகங்களைச் செய்கின்றான்? அதுபோல மாயையிலிருந்து தான் உடல் வந்தது. இரண்டுமே சடம் தான். ஆனால் தானாக வந்துவிடுமோ? நிமித்த காரணன் வேண்டும். அவனே இறைவன். மண்ணில், அகல்வர நீர் வேண்டப்படுமாறு போல மாயையில் உடல் வரத் திருவருள் வேண்டப்படுகிறது. அதைத் துணைக் காரணம் என்பர்.

## குத்துவிளக்கின் தத்துவம்



1. தாமரை போன்ற ஆசனம் - பிரம்மா
2. நெடிய தண்டின் நீட்சி - விஷ்ணு
3. நெய்யேந்தும் அகல் - ருத்திரன்
4. திரிமுனைகள் யாவும் - மகேஸ்வரன்
5. நுனி - சதாசிவம்
6. நெய் - நாதம்
7. திரி - பிந்து
8. சுடர் - திருமகள்
9. தீப்பிழம்பு - கலைமகள்
10. ஜோதி - பராசக்தி

பெண்கள் தமக்குரிய அன்பு, அறிவு, உறுதி, நிதானம், பொறுமை ஆகிய ஐந்து பண்புகளை உணர்த்தும் வகையில் ஐந்து முகங்களை ஏற்றி வழிபடுகிறார்கள்.

வாசுதேவன் இடைமறித்தார் ஆக காரணங்கள் மூன்று என்கின்றீர். முதற்காரணம், நிமித்த காரணம், துணைக்காரணம்.... அல்லவா?

'உண்மைதான். இதுவரை நாம் பார்த்த அத்தனைக் கருத்துகளும், நுட்பமாய் அமைந்த குறள் ஒன்று உண்டு' என்றேன்.

**'அறத்துப்பால், துறவற இயலில் நலையாமை அதிகாரத்தின் கீழ் வரும் ஒன்பதாவது பாடல் இது.**

**"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு'**

இக்குறளின் கருத்து, மேலோட்டமான இறப்பு என்பது உறங்குவது போலவாம், பிறப்பு என்பது அவ் உறக்கத்தினின்றும் விழிப்பது போலவாம்.

சற்று ஊன்றிப்பார்த்தால் திருவள்ளுவர் நம்மைப் பார்த்து ஒரு கேள்வி கேட்பது போல தோன்றும். இறப்பைக் கண்டு ஏன் நீங்கள் அஞ்சுகிறீர்கள். அதற்குத் தான் உறக்கம் என்ற பெயரிலே தினம் தினம் ஒத்திகை பார்க்கின்றீர்களே! என்று அவர் கேட்பது புலப்படும்.

உறக்கம் மரணத்தின் ஒத்திகை என்பது அவர் கருத்து. இதில் வாழ்வின் நிலையாமையைக் கூறவந்த திருவள்ளுவர் மற்றொரு நுட்பத்தையும் உணர்த்துகின்றார். பிறந்து வாழும் உலக வாழ்க்கை எப்படி நிலையற்றதோ, அதுபோல இறந்து வாழும் நிலையும் நிலையற்றது. உறங்கியவன் விழித்தே ஆக வேண்டும் நிரந்தரமாக இருப்பதில்லை! மீண்டும் அஃது ஓர் உடலைப் பெறும் என்கின்றார். "ஆகா! அற்புதம்" என்று பாராட்டினார் வாசுதேவன்.

★★★

# காஞ்சி கருடசேவையில் தொட்டயாச்சாரியார்

இந்திரா ஆரா அமுதன்,
ஸ்ரீரங்கம்

மகாலக்ஷ்மிக்கும் சரஸ்வதிக்கும் இடையே தம்மில் யார் சிறந்தவள் என்ற போட்டி எழுந்தது. பிரம்மாவிடம் தீர்ப்பு கேட்டனர். அவர் "லக்ஷ்மி தான் சிறந்தவள்" என்று சொல்ல சரஸ்வதி கோபம் கொண்டு விஷ்ணுவால் கொடுக்கப்பட்ட சிருஷ்டி தண்டத்தை பிரம்மாவிடமிருந்து பிடுங்கிக் கொண்டு மறைந்தாள். உலக இயக்கம் தடைப்பட்டது. விஷ்ணுவை நோக்கி தவமியற்றினார் பிரம்மா.

ஆயிரம் அசுவமேத யாகம் செய்தால் யாம் வரதராஜராக தோன்றி உமது "சிருஷ்டி தண்டத்தை அளிப்போம்" என்றார் விஷ்ணு.



"ஆயிரம் பரிவேள்வி மிகவும் கடினமாயிற்றே! எவ்வாறு எங்கே நடத்துவேன்?" என்ற கவலைப்பட்டார் பிரம்மா. அப்போது "ஒன்றுக்கு ஆயிரம் பலன் அளிக்கும் சத்யவிரதம் என்கிற காஞ்சிபுரம் செல்" என்ற அசரீரி ஒலியைக் கேட்டு காஞ்சி வந்து அடைந்தார் பிரம்மா.

காஞ்சி என்றால் ஒட்டியாணம் என்று ஒரு பொருள். திருப்பதி மலை ஆதிசேஷன் வடிவில் இருப்பது போல, காஞ்சிபுரம் ஒட்டியாண வடிவில் இருப்பதால் அதைப் பூமாதேவியின் இடையணி என்றும் கூறுவர்.

நகரேஷு காஞ்சி என்ற பெருமையும், முக்தி தரும் ஏழு தலங்களில் ஒன்று என்ற சிறப்பும் உடையதும் ஆகிய இத்தலத்தில் பிரம்மாவின் வேண்டுகோளுக்கு இரங்கி, அக்னியிலிருந்து வரதன் இரு உபயநாச்சிமார்களுடன் புண்யகோடி விமானத்தில் ஆவிர்பவித்து சிருஷ்டி தண்டத்தை பிரம்மாவுக்கு அளித்தார். மகிழ்ந்த பிரமன் பரமனை வணங்கினார். பின் விஸ்வகர்மாவின் மூலம் அத்திகிரியில் 24 படிகளையும் அதன் மேல் புண்ய கோடி விமானத்தையும், இரண்டு பல்லிகளின் முத்திரையையும் பதிக்கச் சொன்னார். அனந்தசரஸ் என்ற திருக்குளத்தின் படிகளும் 24, மதில் சுவரில் பதித்த கற்களின் எண்ணிக்கையும் 24 ஆகும். நெருப்பில் திருஅவதாரம் செய்த வரதனின் திருமுகத்தில் தீப்புண்களின் வடுவை இன்றைக்கும் நாம் தரிசிக்கலாம்.

காஞ்சி குடையழகு என்பார்கள். இத்தகைய சிறப்புமிக்க காஞ்சியின் பெரிய திருவிழா வைகாசி மாதத்தில் வரும் கருடசேவையாகும். பகவான் கருடவாகனத்தில் எழுந்தருளுவதும், குடைகளின் அணிவகுப்பும், அதை மிகவும் லாவகமாகச் சுழற்றும் அற்புதபாணியும் காணக்கண்கோடி வேண்டும். இத்தகைய விழாவில் ஒரு பரம பக்தனின் விருப்பத்தை வரதன் எவ்வாறு நிறைவேற்றி வைக்கிறார் என்பதைப் பார்ப்போம்.

தொட்டயாச்சாரியார் என்பவர் சோளிங்கபுரத்தில் வசித்து வந்தாலும், தவறாமல் காஞ்சி வந்து தினமும் வரதனைத் தொழுது தொண்டு செய்து வந்தார். தள்ளாமை வந்ததால் அவரால் நினைத்தபோது வரதனைச் சென்று சேவிக்க முடிவதில்லையே என்று மிகவும் மனம் நொந்து போய் இருந்த வேளையில் கருடசேவை தினம் நெருங்கி வந்தது. கருட சேவையை சேவிக்க செல்ல முடியவில்லையே என்று வருந்தியவர், மனக் கண்களினால் அந்த காட்சியைக் கண்டபடியே வரதன் மேல் ஐந்து ஸ்லோகங்களைச் சொல்லி வழிபட்டார். பிரியமான பக்தனின் தீனக்குரல் பகவானை எட்டியது. அவருடைய இடத்துக்கே சென்று காட்சி தந்து ஆட்கொண்டார்.

இதையொட்டியே, வருடாவருடம் நடைபெறும் இந்த வைகாசி கருடசேவையில் பகவான் கோபுர வாசல் அருகே வந்தவுடன் அவரை குடையால் சில நிமிடங்களுக்கு மறைப்பார்கள். இந்த சமய அவர் சோளிங்கபுரம் சென்று தரிசனம் கொடுப்பதாக ஐதீகம். இதைத்தான் தொட்டயாச்சாரியார் சேவை என்பார்கள்.

நாம் பகவானை நோக்கி ஓர் அடி எடுத்து

வைத்தால், பகவான் நம்மை நோக்கி பத்து அடி எடுத்து வருவார் என்பது பெரியோர்வாக்கு. வரதனின் அருள் பெற்ற வேறு சிலரின் பேறு இதோ.

ஆந்திராவில் உள்ள கிருஷ்ணா மாவட்டத்தில் கி.பி. 1479ல் பிறந்த மகான் வல்லபாச்சாரியார், சுந்த அத்வைத கொள்கையை நிறுவி இந்தியா பூராவும் யாத்திரை செய்து பரப்பினார். அதனால் குஜராத், மேற்கு இந்தியா போன்ற இடங்களில் பிரபலமானார். இவர் வரதனை சேவிக்க காஞ்சி வந்து வேகவதி தெற்குக் கரையில் தங்கினார். பெருமாள் கோயிலுக்குச் செல்லும் 24 படிகளிலும் கீதகோவிந்தத்தின் 24 அஷ்டபதிகளும் எழுதப்பட்டிருப்பது இவரது கண்களுக்குத் தெரிந்ததால் படிகளை மிதிக்க மனமின்றித் திரும்ப வந்து ஏமாற்றத்துடன் இருந்தார். அன்று இரவில் கனவில் வந்து வரதன் வினவ, இவர் காரணத்தைச் சொன்னார். மறுநாள் வருமாறு வரதன் பணித்தார். அதன் படி மறுநாள் சென்ற போது படிகளில் எழுத்துக்கள் காணப்படாததால் ஆசை தீர வரதனைச் சேவித்து மகிழ்ந்தாராம். கோயில் பிரசாதமான பிரபல காஞ்சிபுரம் இட்லி என்கிற பலகாரத்தை இவர்தான் கண்டு பிடித்து அறிமுகப்படுத்தினார் என்று இவரது சிஷ்யர்கள் கூறுகிறார்கள்.

வெகுதூரத்திலிருந்து வரதன் திருமஞ்சனத்துக்காக தாததேசிகன் என்பவர் திருமஞ்சனக் குடத்தை சுமந்து வந்து நீர் கொண்டு வருவாராம். வயது தளர்ந்து வெகுதூரம் செல்ல முடியாமல் தவித்த போது சாலைக் கிணறு என்ற இடத்தில் பெருமாள் வேடனாக வந்து ஒரு அம்பை எய்து அந்த கிணற்றிலிருந்து நீர் சேந்தி வருமாறு செய்ததுடன், தன் தாகத்தைத் தீர்த்ததற்காக அவரை "தாதை" என்று அழைத்தாராம். "தாதை" என்றால் அப்பா என்ற பொருளில் அழைத்ததால் அந்தக் குடும்பம் தாத தேசிகன், தாத்தாச்சாரியார் குடும்பம் என்ற பரம்பரை ஆனார்கள். பின்னாளில்





## தங்கப்பல்லி வெள்ளிபல்லி

*காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆலயத்தில் மூலவர் சந்நிதிக்குப் பின்புறப் பிரகாரத்தில் உத்திரத்தின் மீது தங்கபல்லி, வெள்ளி பல்லிகள் உடனே சூரியனும், சந்திரனும் உள்ளனர்.*

*பல்லி தோஷம், சூரிய சந்திர கிரகண தோஷங்கள் நீங்க இவர்களைத் தொட்டு தரிசிக்க வேண்டும்.*

ஸ்ரீராமானுஜரும் அதே சாலைக் கிணற்றிலிருந்து தான் திருமஞ்சன நீர் எடுத்து தீர்த்த கைங்கர்யம் செய்து வந்தார் வரதனுக்கு. பல்லவ உற்சவத்தில் புண்யகோடி விமானத்துடன் அவதரித்த வரதனின் சரிதையை ஸ்ரீ லக்ஷ்மி குமாரதாத தேசிகன் வம்சத்தினர் மணிப்ரவாள வ்யாக்னத்துடன் வாசிப்பதும் பகவான் அதைக் கேட்டு மகிழ்வதும் வழக்கம். குசலவர்கள் கானம் செய்த தன் சரிதையை ஸ்ரீராமன் கேட்டு அனுபவித்ததற்கு ஒப்பானது என்று பெரியோர் சொல்வார்கள்.

அன்னதானம் செய்ததன் விளைவாக, சோழ அரசனுக்குக் கப்பம் கட்ட முடியாத நிலையில் சிறையில் அடைக்கப்பட்ட திருமங்கையாழ்வாரையும் காஞ்சி வந்தால் தனம் தருவதாக சொல்லி அவரை காப்பாற்றியது கதை, இன்னும் எவ்வளவோ சொல்லலாம். வேறு ஒரு சந்தர்ப்பத்தில் அவற்றை அனுபவிப்போம். ★



"ஜோதிடச்சக்கரவர்த்தி"
**ஏ.எம்.ஆர்.**

# அடியவரை ஆட்கொண்டருளும் ஆடவல்லீஸ்வரப் பெருமான்!

**ஐயனின் கருணை அளவற்றது!** கடலுக்கும் கரை உண்டு!!

ஆனால், அந்தத் திருக்கயிலைப் பதியான சிவபெருமானின் கருணைக்குக் கரையும் இல்லை, எல்லையும் இல்லை. தன் பக்தர்களைக் கண்டுவிட்டால்-தன் அடியார்களின் நினைவு தன் திருவுள்ளத்தில் வந்து விட்டால், ஆனந்தப் பரவசத்தில் ஆழ்ந்து விடுவான் அந்தப் பிரபு.

அவனுக்குப் பிடிக்காதது, அகங்காரம். பிடித்தது தூயபக்தி.

பக்தர்களிடம் பல குறைகள் இருந்தாலும் கூட, அவற்றை விலக்கி, அவர்கள் தன் மீது கொண்டுள்ள பக்தியை மட்டும் மனமுவந்து, ஏற்று அவர்கள் கேட்பது எதுவானாலும், உடனுக்குடன் அளித்து அருள் புரியும் கருணைக் கடல் அந்த அம்பிகை பாகன். தன்னை நம்பும் அடியவர்க்கு- தன்னை நாடிவரும் எளியவர்க்கு "இல்லை" என்று சொல்லத் தெரியாதவன் அந்த அர்த்த நாரீஸ்வரன்.



அவனது திருவுள்ளத்திற்கு மிகவும் உகந்தது இந்தப் பாரத புண்ணிய பூமி. தேவகங்கையை, பகீரதனின் தவத்தை ஏற்று, பூவுலகிற்கு பாகீரதியாக அளித்து, அருள்புரிந்தான் அந்த கங்காதரன். அதனால், பாரதம் மேலும் புனிதம் அடைந்தது.

ஆதலால் தான், தன் திருவுள்ளத்திற்கு மிகவும் பிடித்த இந்தப் பாரத புண்ணிய பூமியில் அதுவும் ஏராளமான தவச்சீலர்கள், மகான்கள், சித்தர்கள் ஆகியோரின் பாதங்கள் பட்டு மகத்தான புனிதமடைந்துள்ள தமிழகத்தில் பல திருத்தலங்களைத் தன் உறைவிடமாகக் கொண்டு திருவருள் புரிந்து வருகின்றான்.

ஆதலால் தான், தமிழகத்தில் அற்புதத் தெய்வீக சக்தி வாய்ந்த ஏராளமான திருக்கோயில்கள் அமைந்துள்ளன.

தாயற்றவர்க்குத் தாயாகவும், தந்தையற்றவர்க்குத் தந்தையாகவும் திக்கற்றவர்க்குத் துணையாகவும் நின்று திருவருள் புரிந்து வருகின்றான்.

கலைச் செல்வமாகவும்,



திருவருட் செல்வமாகவும் திகழும் இத்தகைய திருக்கோயில்களை வேறெங்கும் காண முடியாது. **பண்டைய காலத்தில் மாமன்னர்களால் பராமரிக்கப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வந்த இப்பொக்கிஷங்களை இன்று தமிழக அரசு, இந்து சமய அறநிலையத்துறையின் மூலம் பாதுகாத்துவரும் அரிய தெய்வீகப் பணியைச் செய்து வருகிறது.**

எவ்வித நவீன இயந்திர வசதிகளும் இல்லாத பண்டைய காலத்தில், இத்தகைய கலைக் கோயில்களை நம் ஆன்றோர்கள் எவ்விதம் உருவாக்கினார்கள் என்று உலகமே வியந்து நிற்கிறது இன்று!

இத்தகைய, அரிய திருக்கோயில்களில் ஒன்றுதான் விழுப்புரம் மாவட்டத்தில் திகழும் **அருள்மிகு பிரகன் நாயகி உடனுறை திரு ஆடவல்லீஸ்வரர்** திருக்கோயிலாகும்.

மிக, மிகப் புராதனமான இத்திருக்கோயிலின் அழகும், தெய்வீக சக்தியும், வார்த்தைகளினால் விவரிப்பதற்கு இயலாதவை ஆகும்.

புராதன காலத்தில் **முன்னூற்று மங்கலம்** எனப் பிரசித்தி பெற்றிருந்த இத்தெய்வீக நகரம், காலக்கிரமத்தில் சிற்றூராகித் தற்போது **முன்னூர்** என்ற பெயருடன் திகழ்கிறது.

இத்திருக்கோயிலில் உள்ள ஏராளமான கல்வெட்டுக்கள் இத்திருக்கோயில் மற்றும் இத்திருத்தலம் ஆகியவற்றின் புராதனப் பெருமைகளை வெளிப்படுத்துகின்றன. சோழப் பேரரசை உருவாக்குவதில் பெரும் பங்கு கொண்டிருந்தவர்களுள் சம்புவராயர்கள் மிகவும் முக்கியமானவராவார்கள். அவர்கள் தோன்றி, புகழுடன் வாழ்ந்தது இந்த முன்னூரில் தான் என்பதை இந்தக் கல்வெட்டுகளின் மூலம் அறிய முடிகிறது.



இத்திருக்கோயிலுக்கு காஞ்சி ஸ்ரீகாமகோடி ஜகத்குரு மகா பெரியவர்களும், திருமுருககிருபானந்த வாரியார் அவர்களும் திருவலம் ஸ்ரீ சிவானந்த மவுனகுரு சுவாமிகளும் எழுந்தருளி, தரிசித்துப் பரமானந்தம் அடைந்துள்ளனர்.



**மன்னன் குலோத்துங்கனுக்குத் தரிசனம்!**

சிவபக்தியில் சிறந்தவன் மன்னன் குலோத்துங்கன். திருச்சிற்றம்பலத்தில் ஐயன் ஆடிய திருநடனம் அவனது மனதைக் கொள்ளை கொண்டது. எந்தச் சிவ க்ஷேத்திரத் திற்குச் சென்றாலும், அந்த ஆடல் தரிசனத் திற்காகவே ஏங்கி நிற்பது வழக்கம். அவ்வாறே, இந்த முன்னூர் தலத்தின் எம்பெருமானிடம் வந்து, மனமுருகி நின்ற போது, அவனது பக்தியைக் கண்டு, ஐயனுக்கும் மனம் இளகிவிட்டது.

தன் திருவுள்ளம் மகிழ்ந்து, தன் பக்தனின் ஆசையை நிறைவேற்றி வைத்தான். திருச்சிற்றம்பலத்தில், அன்னை சிவகாமி கண்டு களித்த ஆனந்த நடனத்தை ஆடி, தரிசனம் அளித்து, அருள்புரிந்தான். அன்றிலிருந்து, இந்தஎம்பெருமானுக்கு ஆடவல்லீஸ்வரர் என்ற திருநாமம் ஏற்பட்டது.

இரண்டாம் குலோத்துங்க மன்னனால், இந்த அற்புதத் திருக்கோயில் விஸ்தரிக்கப்பட்டு, புனர் நிர்மாணம் செய்யப்பட்டது. சங்க காலத்திலிருந்தே, தெய்வீகப் புகழ்பெற்ற இத்திருத்தலம் பற்றி, சங்க இலக்கியங்களில் ஒன்றான சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார் சிறுபாணனை ஆற்றுப்படுத்தும் பாடல்களில் கூறப்பட்டுள்ளது.



**பிருகஸ்பதிக்கு அருளியது**

இந்திரனுக்கும், தேவர்களுக்கும் ஆச்சாரியன் (குரு), பிருகஸ்பதி. நவக்கிரகங்களில் ஒருவராகத் திகழ்பவர் குருபகவான். ரிக், யஜுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலும் கரை கண்டவர் இவர். சீலத்தினாலும் கடும் தவ வேள்விகளினாலும், இவர் பெற்றிருந்த அளவற்ற ஆத்ம சக்தியினால், மூவுலகமும் இவரைப் பணிந்து போற்றி வணங்கியது.

எவரானாலும், புகழ் என்று வந்து விட்டால் கர்வமும் ஏற்பட்டு விடுகிறதல்லவா! அவ்வாறே, தேவகுருவான பிருகஸ்பதிக்கும், ஒரு நாள் அதுவும், சில விநாடிகளுக்கு மட்டும் "தான்", "தனக்கு நிகர் எவரும் இல்லை" என்ற அகங்காரம் கர்வம் ஏற்பட்டது.

"**தேவர்களானாலும் கூட கர்வம் கூடாது**" என்பது தர்மம் என்ற சட்டத்தின் நியதி ஆகும்.

ஒரு க்ஷண நேர கர்வத்தினால் பிருஹஸ்பதியின் மனதில் மாசு ஏற்பட்டது. அதனால் அவரது தெய்வீக ஒளியை குரு இழந்தார்.

இந்நிலையில், தேவேந்திரனின் சபைக்கு அவர் சென்ற போது, தேவர்களும், இந்திரனும், முன்பு அவருக்குக் காட்டிய பக்தியையும், மரியாதையையும் காட்டவில்லை. சபையில் அவர் நுழைந்த போது எப்போதும், மரியாதை காட்டி நிற்கும் முனிவர்கள், அக்கினி, வருணன், வாயு ஆகிய தேவர்களும், அவருக்கு எழுந்து மரியாதை செலுத்தாமல் அவரவரது ஆசனங்களில் அமர்ந்திருந்தனர்.

ஒரு நிமிட நேர செருக்கினால், அவரிடமிருந்த தெய்வீக ஒளி அவரை விட்டு விலகி விட்டதே இந்திரனும், தேவர்களும், முனிவர்களும் அவரை அவமதித்ததற்குக் காரணமாகும்.

தான் செய்த சிறு தவறினால் தன் தெய்வீக தேஜஸ்ஸை (ஒளியை) இழந்து, அதனால் அவமானப்பட்டதையும் நினைத்து, நினைத்து மனம் வருந்தினார் தேவகுரு.

சிருஷ்டிக் கடவுளான பிரம்ம தேவரிடம் சென்று அவரைப் பூஜித்து சிறிது நேர ஆணவத்தினால் தான் இழந்த தெய்வீக ஒளியையும், ஆத்ம பலத்தையும் மீண்டும் பெறுவதற்கு வழிகூறி அருளும்படி மன்றாடினார். பிரம்ம தேவரும் மனம் இரங்கி, பூவுலகில், அன்னைபராசக்தியுடன் ஆனந்தக் கூத்தாடும் ஆடவல்லீஸ்வரப் பெருமானைத் தரிசித்து, அங்குள்ள திருக்குளத்தின் கரையில் அமர்ந்து, தவமியற்றினால், மீண்டும் மனத்தூய்மை பெற்று, இழந்த தெய்வீக சக்தியையும், ஒளியையும் பெறலாம் என்று அருள் பாலித்தார்.

நான்முகனின் அறிவுரையினால் மனத்தெளிவுபெற்ற பிருகஸ்பதியும், பிரகன்நாயகி சமேத ஆடவல்லீஸ்வரப் பெருமான் எழுந்தருளியுள்ள **முன்னூற்று மங்கலம்** என்ற திருத்தலம் வந்து அங்குள்ள பிரம்ம தீர்த்தத்தில் நீராடி, சுயம்பு மூர்த்தியான ஆடவல்லீஸ்வரரை சிந்தையில் நிறுத்தி, பல ஆண்டுகள் கடுந்தவம் இயற்றினார். அவரது தவத்தினால் மனம் இரங்கிய



## இவர் யார் எனக் கண்டுபிடியுங்கள்?

*இவரைத் தெய்வத்துடன் இணைத்துக் கொண்டாடுவார்கள்.*

*இராமாயணம் இயற்றிய வால்மீகி முனிவரை விடவும், பாரதம் இயற்றிய வியாசரைவிடவும், ஆதிசேடன், அகத்திய முனிவரை விடவும் இவர் பெரியவர் எனப் புகழப்படுகின்றார்.*

*இவர் நம் தமிழ்த் திருநாட்டில் தோன்றிய அருளாளர் தாம். இவர் யார் எனக் கண்டு பிடியுங்கள். இயலாதவர்கள்* *40 ஆம் பக்கம் பார்க்கவும்.*

# ஔவைப் பெருவிழா





வேதாரண்யம் வட்டம், துளசியாப் பட்டினம் அருள்மிகு ஔவையார் விஸ்வநாதர் திருக்கோயிலில் 10.4.2005 அன்று ஔவைப் பெருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவில் மாண்புமிகு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் அமைச்சர் திருமிகு **பி.சி. இராமசாமி** அவர்கள், மாண்புமிகு வனம் மற்றும் சுற்றுச் சூழல் துறை அமைச்சர் திருமிகு **ஆர். வைத்திலிங்கம்** அவர்கள், தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசுச் செயலாளர் திருமிகு **பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப. அவர்கள், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் திருமிகு **த. பிச்சாண்டி,** இ.ஆ.ப.அவர்கள் ஆகியோர் பங்கேற்றுச் சிறப்பித்தார்கள்.

எம்பெருமான், தன் தேவி, பிரகன் நாயகியுடன் குருவிற்குத் தரிசனம் அளித்து அவர் இழந்த தபோபலத்தையும், தேஜஸ்ஸையும் அளித்து அருள் புரிந்தார்.

நவக்கிரகங்களில் முழுமையான சுபபலம் பெற்ற குருபகவான், இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட இத்திருத்தலம் அன்றிலிருந்து **தென்கைலாயம்** என ஈரேழு பதினான்கு உலகத்தினராலும் பூஜிக்கப்பட்டு வருகிறது.

இத்திருக்கோயிலின் சரித்திர, புராதன பெருமைகளை விளக்கும் 52 கல்வெட்டுக்கள் இங்கு உள்ளன. மிகப் பெரிய, அற்புதமான திருக்கோயில் இது.

**குருபலம் குறைந்திருப்பதால் ஏற்படும் திருமணத் தடை, நிம்மதி குறைந்த குடும்பம், குழந்தைகளின் ஆரோக்கிய பிரச்சனை ஆகியவற்றிற்கு சக்தி வாய்ந்த பரிகாரத் தலம் இது.**

இத்தகைய அற்புத சக்தியும், பேரழகும், பெரிய பரப்பளவும், கொண்டுள்ள திருக்கோயில் இன்று பல பக்தர்களின் முயற்சியினால், திருப்பணிகள் நடந்து வருகின்றன. அழகிற்கு அழகு செய்யும் ஆடவல்லீஸ்வரப் பெருமான், அன்னை பிரகன் நாயகி, வள்ளி, தெய்வானை சமேத முருகப்பெருமான், நந்தியெம்பெருமான், விநாயகர் என்று ஒவ்வொருவரும் ஒரு கலைப் பொக்கிஷமாகவே திவ்ய தரிசனம் தருகின்றனர். ஒரு கணம் உற்றுப் பார்த்தால் நம்முடன் பேசுவது போலவும், உதடுகளில் புன்சிரிப்பு தவழ்வதையும் உணர முடியும். இது கற்பனை அல்ல. அனுபவத்தில் கண்டதாகும். தரிசிக்கும் போது, பெருகி வரும் உணர்ச்சிகளும், கண்ணீரும் கட்டுக்கு அடங்காதவை.

பெறற்கரிய இத்திருக்கோயிலை, நாம் ஒவ்வொருவரும், பிறவியில் ஒருமுறையாவத தரிசிப்பது அவசியம். ஆடவல்லீஸ்வரர், பிரகன் நாயகி தரிசனம் ஒரு ஈடிணையற்ற, பேரானந்த அனுபவமாகும்.



தெய்வச் சேக்கிழார்

**முன்பக்க வினாவிற்கு விடை :**
**இவர்தாம் அவர்.**
**"திருத்தொண்டர் புராணம்" எனும் பெரியபுராணம் பாடி அருளிய தெய்வச் சேக்கிழாரே இவர்.**
**"செல்வமலி குன்றத்தூர் சேக்கிழாரடி சென்னி இருத்துவாம்".**

**விசேஷ குறிப்பு : இத்திருத்தலம் : விழுப்புரம் மாவட்டம், திண்டிவனத்திலிருந்து மரக்காணம் செல்லும் மார்க்கத்தில் 19 கி.மீ தொலைவில் உள்ள ஆலங்குப்பத்திலிருந்து தெற்கே 2கி.மீ. தூரத்தில் உள்ளது.**

**திண்டிவனம்-முன்னூர் இடையில் தமிழக அரசு இயக்கும் பேருந்து தடம் எண் : 22**

***


சிறப்பாசிரியர் மற்றும் திருமிகு **த.பிச்சாண்டி** இ.ஆ.ப., ஆணையர்,
வெளியிடுவோர் : தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையஆட்சித்துறை, சென்னை - 600 034.தொலைபேசி : 28334811/12/13
ஆசிரியர் : கவிஞர் டாக்டர். த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பி.எச்.டி.,
அச்சிடுவோர் : இராயப்பேட்டை எழுதுபொருள் அச்சு மற்றும் உபபொருள்கள் உற்பத்தியாளர் தொழிற் கூட்டுறவு

# திருத்தணி
# அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி
# திருக்கோயில்



## திருப்பணி வேண்டுகோள்

மெய்யன்பரீர்,

"ஆடல் வல்லான்" அருள்மிகு நடராசப் பெருமான் திருநடனக் காட்சி அருளிய ஐந்து சபைகளில் முதல் சபையான "இரத்தின சபை" எனப் போற்றப்படும் திருவாலங்காடு அருள்மிகு வடாரண்யேஸ்வரசுவாமி திருக்கோயில், திருத்தணி அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலின் உபகோயில்களில் ஒன்றாகும்.

இத்திருக்கோயில் "மகா கும்பாபிஷேகம்" நடைபெற்று 12 ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டபடியால், மீண்டும் மிகச் சிறப்பான முறையில் "மகா கும்பாபிஷேகம்" செய்திடத் தற்போது சுமார் ரூ. 25 இலட்சம் மதிப்பீட்டில் திருப்பணிகள் முழு வீச்சில் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

## திருப்பணிகள் விபரம்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்கோயில் நுழைவு வாயில் மேலேயுள்ள சாளகாரம், ஆர்ச், ஏகவர்ணம், கதவு ரிப்பேர் செய்தல் பணி | ரூ. | 40,000 /- |
| 2. | திருக்கோயில் பிரதான மதிற்சுவர் பெயிண்டிங் மற்றும் அனைத்து விமானங்களுக்கும் திருப்பணி | ரூ. | 2,22,000 /- |
| 3. | வெளிப்புற இரண்டாம் மதிற்சுவர் திருப்பணி | ரூ. | 2,00,000 /- |
| 4. | வெளிப்புற மதிற்சுவர் பெயிண்டிங் திருப்பணி | ரூ. | 2,00,000 /- |
| 5. | 100 கால் மண்டபம் திருப்பணி | ரூ. | 1,00,000 /- |
| 6. | வாகன மண்டபம் திருப்பணி | ரூ | 1,00,000 /- |
| 7. | பழைய பாலாலய மண்டபம் திருப்பணி | ரூ. | 50,000 /- |
| 8. | கொடிமரம் திருப்பணி | ரூ. | 30,000 /- |
| 9. | வெளிப்புற மதிற்சுவருக்கு மாணிக்கப்பட்டை அடித்தல் | ரூ. | 2,00,000 /- |
| 10. | இரண்டாம் பிரகாரத் தரைக்கு கான்கிரிட் தளம் அமைத்தல் அமைத்தல் | ரூ. | 8,00,000 /- |
| 11. | வெளிப்புற மதிற்சுவருக்குக் கோப்பிங் திருப்பணி செய்தல் | ரூ. | 5,58,000 /- |
| | கூடுதல் | ரூ. | 25,00,000 /- |

திருவருள் துணையுடன் திருவாலங்காடு அருள்மிகு வடாரண்யேஸ்வரசுவாமி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா வெகு விரைவில் நடைபெற உள்ளதால் மேற்கண்ட திருப்பணிகளில் விரும்பிய திருப்பணியைத் தங்கள் நேரடி உபயமாகச் செய்து கொடுத்து த் திருவாலங்காட்டப்பன் திருவருள் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

அனைத்துத் திருப்பணி நன்கொடைகளுக்கும் வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 80 (ஜி) இன் கீழ் வரிச்சலுகை உண்டு.

"நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர் !
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர் !"

மேலும் விபரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

**இணை ஆணையர் / செயல் அலுவலர்,**
அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், திருத்தணி,
தொலைபேசி : 04118 - 285225, 04118 - 285303 (ஃபேக்ஸ்)

**எஸ்.நரசராஜ்**
அறங்காவலர் குழுத் தலைவர்,

**இரா. முத்துசாமி** பி.எஸ்ஸி.,பி.எல்.,
இணை ஆணையர் / செயல் அலுவலர்

பதிவு எண் : TN / PMG / (CCR) / 707/ 03-05 / WPP No. 451 / 03/05



# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

திருச்செந்தூர்

## 2005 ஆம் ஆண்டு வைகாசி விசாகத் திருவிழா - அழைப்பிதழ்

| | | |
|---|---|---|
| 14.5.2005 முதல் 22.5.2005 முடிய | - | வைகாசி வசந்த உற்சவம் - நாள்தோறும் அருள்மிகு ஜெயந்திநாதர் வசந்த மண்டபத்தில் எழுந்தருளிப் பக்தர்களுக்குக் காட்சி கொடுத்து மாலை தங்கத்தேரில் பவனி வருதல் |
| 23.5.2005 | - | வைகாசி விசாகம். வைகாசி விசாகத்தன்று இரவு அருள்மிகு ஜெயந்திநாதர் வசந்த மண்டபத்தில் எழுந்தருளிப் பராசரமுனி குமாரர்களுக்கு சாப விமோசனம் அளித்தல் |

### பக்தர்களுக்குச் செய்யப்பட்டுள்ள வசதிகள்

1. பக்தர்கள் தரிசனம் செய்வதற்கு தரிசன வசதி ஏற்பாடு செய்யப்பட்டுள்து.
2. விசாக தினத்தன்று சண்முகப்பெருமானுக்குச் சிறப்பு அபிஷேகம் மற்றும் தீபாராதனை நடைபெறும்.
3. கார்த்திகையன்று அருள்மிகு ஜெயந்திநாதர் சிறப்பு அபிஷேகம், மாலை திருவிளக்குப்பூஜை, இரவு தங்கரதப் புறப்பாடு நடைபெறும்.
4. சித்திரை முதல்நாள் மற்றும் ஐப்பசி முதல்நாள் அருள்மிகு சண்முகப்பெருமானுக்கு அன்னாபிஷேகம், சிறப்பு வழிபாடு நடைபெறும்.
5. இத்திருக்கோயிலில் பன்னீர் இலை விபூதி பக்தர்களுக்கு வழங்கப்பட்டு வருகிறது.
6. இத்திருக்கோயிலில் அனைவருக்கும் நல்ல சந்தனம் வழங்கப்பட்டு வருகிறது.
7. ஒவ்வொரு தமிழ் மாதக் கடைசி வெள்ளியன்று 1000 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.
8. மாண்புமிகு தமிழக முதலமைச்சரின் (நன்கொடையாளர் பங்களிப்புடன் கூடிய) அன்னதானத் திட்டத்தின் கீழ் தினசரி 500 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

வைகாசி விசாகத்திருவிழாவில் பக்தர்கள் கலந்துகொண்டு செந்திலாண்டவர் அருள் பெற்றுய்யுமாறுஅன்புடன் அழைக்கின்றோம்.

இங்ஙனம்

கோ. பக்கிரிசாமி. பி.எஸ்ஸி., பி.எல்.,
இணை ஆணையர்/செயல் அலுவலர்

டாக்டர் திரு பா.சிவந்தி ஆதித்தனார்,
அறங்காவலர்குழுத் தலைவர்.

அறங்காவலர்கள்

மு. இராமச்சந்திரன்
வி. அண்ணாமலைசுப்பிரமணியன்

கே.ஆர்.பி. மணிமொழியன்
ரா. தேவசேனா.